அருட்கவி தவத்திரு

# ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஆஞ்ஜநேயர் அருட்புகழ்



வெளியிடுவோர்:

ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட்
நங்கைநல்லூர், சென்னை–61.

ஸ்வாமிகளின்
ஏழாவது
ஆராதனை நாள்
வெளியீடு
(21-2-2007)

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

## அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஆஞ்ஜநேயர் அருட்புகழ்



ஸ்வாமிகளின் ஏழாவது ஆராதனை நாள் வெளியீடு



வெளியிடுவோர்:

ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட், நங்கைநல்லூர், சென்னை–61.
21-2-2007

# ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை

| | | |
|---|---|---|
| பெயர் | : | ஆஞ்ஜநேயர் அருட்புகழ் |
| ஆசிரியர் | : | அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் |
| பதிப்பும் தேதியும் | : | முதற்பதிப்பு – 21-2-2007 |
| வெளியிடுவோர் & உரிமை | : | பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட் |
| அளவு & பக்கங்கள் | : | A8 (Dimmy) & 32 பக்கம் |
| காகிதம் | : | 60 GSM Maplitho |
| அட்டை | : | 120 GSM Art Board |
| பொருள் | : | ஆன்மிகம் (கவிதைகள்) |
| விலை | : | Rs.12.00 |
| பிரதிகள் | : | 1100 |
| Laser Typeset & Printed | : | Visual Graphics, Chennai-61 ✆ 9841459068 |

கிடைக்குமிடங்கள் :

- **பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்**
  பொங்கி மடாலயம், 10/22, பொங்கி மடாலயம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–600 061. Ph.: 22241355
- **R. ஸ்ரீதரன்**
  'ஸ்வர்ணபுரி' எண்.T-7, முதல் குறுக்கு, 46–ஆம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–600 061. Ph.: 22321616
- **ஸ்ரீ மு.கோ. ராமன்**
  'ஸ்ரீ வைஷ்ணவி', பரப்பனங்காடி–676 303. Ph.: 0494 - 2411282
- **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
  எண்.154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை–600 018.

## பொருளடக்கம்

பக்கம்

உ

முருகன் துணை

# அணிந்துரை

திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டம், தென்காசி தாலுகா கடையநல்லூர் அருகில் கிருஷ்ணாபுரம் (கிஷ்கிந்தாபுரம்) கிராமத்தில் எழுந்தருளியுள்ள, வயற்காட்டு அபயஹஸ்த ஸ்ரீ ஆஞ்ஜநேய ஸ்வாமியின் பெருமை தற்பொழுது உலகமெல்லாம் பரவியுள்ளது என்று சொன்னால் மிகையாகாது.

வீர, தீர, சூர ஹனுமானின் பெருமை அளவிடற்கரியது. அசோகவனத்தில் சீதை உயிரைமாய்த்துக் கொள்ளும் தருணம் அதைத் தடுத்து நிறுத்தினார். சீதையின் கணையாழியைக் காட்டி, சீதையின் பிரிவால் வாடிய ஸ்ரீராமனுடைய சோகத்தை நீக்கி, அவரை மகிழச் செய்தார். போரில் மயக்கமுற்ற லக்ஷ்மணனை ஸஞ்ஜீவி பர்வதத்தைக் கொண்டு வந்து காப்பாற்றினார். பதினான்கு ஆண்டுகள் ஆகியும் இராமர் திரும்பி வராததால் தீக்குளிக்கத் தயாராக இருந்த பரதனை, இராமர் வரும் செய்தியைச் சொல்லித் தடுத்துக் காப்பாற்றினார். இவ்வாறு இராமாயணத்திலேயே சீதை, இராமர், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் இவர்களைக் காப்பாற்றிய பெருமையுடையோன் அஞ்சனா புத்திரன்.

இராமாயண காவியத்திலேயே மாருதி புகழ்கூறும் சுந்தர காண்டத்தையே எல்லோரும் பாராயணம் செய்வது அவருடைய புகழுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

தன்னிகரில்லாத இராமபக்தனான ஹனுமான் நாம் இராமனை உட்கார்ந்துகொண்டு பாடும் பொழுது நின்று கொண்டும், நின்று கொண்டு பாடும் பொழுது குதித்துக் கொண்டும், நாம் குதித்துக் கொண்டு பாடும் பொழுது நம் உள்ளத்தில் ஆடிக் கொண்டும் இராமன் புகழைக் கேட்கிறார் என்பது கபீர்தாஸ் வாக்கு.

சிரஞ்ஜீவியான ஹனுமான் கலியுகத்தில் பக்தர்களுக்கு அவரவர் நினைத்த வரங்களைக் கொடுப்பதற்காகவே எல்லா இடங்களிலும் கோயில் கொண்டிருக்கிறார். இதனால் ஹனுமானுடைய கோயில்கள் இராமருடைய கோயில்களை விட அதிகமாக இருப்பதில் ஆச்சர்யம் இல்லை.

சிறப்பாக, பக்தர்களுடைய, குற்றங் குறைகளையும் பயத்தையும் நீக்கி அருளுவதற்காக அபயஹஸ்த ஆஞ்ஜநேயராகக் கிருஷ்ணாபுரத்தில் விளங்குகிறார்.

சொல்லின் செல்வனான நமது வயற்காட்டு அபயஹஸ்த ஜய வீர ஹனுமான் 1992 ஆம் ஆண்டு, திருப்போரூர் முருகனின் திருவருளும், வள்ளிமலைத் திருப்புகழ் சச்சிதானந்த சுவாமிகளின் குருவருளும் நிரம்பப்பெற்ற அருட்கவி தவத்திரு சாதுராம் சுவாமிகள், ஷஷ்டி உத்ஸவத்திற்குக் கடையநல்லூர்

வந்திருந்த பொழுது, தன்னுடைய சந்நிதிக்கு அழைத்து வெற்றிவேலனின் திருப்புகழ் பாடும் சுவாமிகளின் வாயினால் தன்னைப் பற்றியும் முப்பத்திரண்டு அருட்புகழ்ப் பாக்களை ஆசுகவியாகப் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்து அருளினார்.

அன்னாரின் அருட்பாடல்களுக்குப் பிறகு 26-11-1993-இல் கார்த்திகை மாதத்தில் வயற்காட்டு ஆஞ்சநேயருக்குக் கும்பாபிஷேகம் நடந்தமை ஒரு மகிழ்ச்சியான நிகழ்ச்சியாகும். 18-02-1994-இல் அந்த 32 பாடல்களும் நம் சங்கத்தால் புத்தகமாக வெளியிடப் பெற்றன. சாதுராம் சுவாமிகள் அவர்களுடைய ஏழாம் ஆராதனை நாள் 21-02-2007-இல் அமைகின்றது. அந் நாளிலே மேல்பாடி, செங்கற்பட்டு முதலிய ஊர்களின் அனுமன் அருட்புகழ்ப் பாடல்களுடன், சுவாமிகள் நம் ஊரில் பாடிய அந்த 32 பாடல்களையும் குறிப்புரையுடன் 'ஆஞ்ஜநேயர் அருட்புகழ்' என்ற பெயரில் நங்கைநல்லூர் ஸ்ரீ ஸாதுராம் சுவாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளையார் வெளியிட இருக்கிறார்கள். நமது வயற்காட்டு ஆஞ்ஜநேயருக்குக் கும்பாபிஷேகம் நடக்க இருக்கின்ற 07-02-2007-லிருந்து 14-ஆம் நாள் நம்மூர்ப் பாடல்கள் மறுபடியும் அச்சிடப்பெறுகின்றமை நமக்கு மற்றொரு மகிழ்ச்சியான செய்தி ஆகும்.

நேரில் வந்து தரிசிக்க முடியாதவர்களுக்கும் அவன் புகழை வீட்டிலிருந்து கொண்டு பாடுபவர்களுக்கும் இஃது ஓர் அரிய வரப்பிரசாதமாகும்.

இந்த அரிய நேரத்தில் ஹநுமானின் அருட்புகழ்ப் பதிகங்களை அச்சிட்டு வெளியிடும் சென்னை நங்கைநல்லூர்ப் பொங்கி மடாலய அருட்கவி தவத்திரு சாதுராம் சுவாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளையார்க்குக் கிருஷ்ணாபுரம் ஜய வீர மாருதி ஸேவா சமிதித் தொண்டர்களும், பிராம்மண ஸங்கமும் மனமார்ந்த நன்றியறிதலைத் தெவிவித்துக் கொள்கிறோம்.

எல்லோரும் இந்த ஆஞ்ஜநேயர் அருட்புகழைப் பாடி அவருடைய அருளாசியைப் பெற்று இன்பமுடன் வாழப் பிரார்த்திக்கிறோம்.

இறைபணித் தொண்டர்கள்
ஜய வீரமாருதி ஸேவா ஸமிதி,
கிருஷ்ணாபுரம் கிராம
ப்ராம்ஹண சங்கம் சார்பில்
**D. அனந்தஸுப்ரமண்யன்**

கிருஷ்ணாபுரம்
25-01-2007
(ரதஸப்தமி நன்னாள்)

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

# பதிப்புரை

புத்திர்பலம் யசோதைர்யம் நிர்ப்பயத்வம் அரோகதா
அஜாட்யம் வாக்படுத்வம்ச ஹநூமத் ஸ்மரணாத் பவேத்

*(நல்லறிவு, மநோபலம், கீர்த்தி, தைர்யம், அஞ்சாமை, நோயின்மை, சுறுசுறுப்பு, வாக்குவன்மை இவை அநுமனை நினைப்பதால் உண்டாகும் என்பது மேற்கண்ட ச்லோகத்தின் பொருள்)*

விலங்கின் தலை, மனித உடல் இவற்றைக் கொண்ட விநாயகர், நரஸிம்மர், (குதிரை முகத்து) ஹயக்ரீவர், (பன்றி முகத்து) லக்ஷ்மி வராஹர், வாராஹி, நாரஸிம்ஹி ஆகிய மூர்த்திகள் போல், மர்க்கடத்தின் (குரங்கின்) முகத்தைக் கொண்ட ஆஞ்ஜநேயர் ஒரு சிறந்த உபாஸநா தெய்வம்.

ப்ரம்மசர்யத்தால் பெருமை பெற்றவர் அநுமன். நவ (ஒன்பது) வித பக்திகளுள் தாஸ்ய பக்திக்கு எடுத்துக்காட்டாக உள்ள ராம பக்தர். விச்வரூபம் எடுத்தவர். இராமாயண சுந்தர காண்டத்தின் முக்ய நாயகன். பில்லி, சூன்யம் போன்ற ஆபிசார ப்ரயோகங்களை அகற்றுபவர். ஸர்வ பந்த விமோக்த்ரே நம:(9), பரவித்யா பரீஹாராய நம:(11), பரமந்த்ர நிராகர்த்ரே நம:(13) என்பன இதற்கு ஆதாரமான ஆஞ்ஜநேய அஷ்டோத்தர சத நாமங்கள். விநாயக, சிவ, விஷ்ணு ஆலயங்களில் பெரும்பாலும் ருத்ராம்சம் பொருந்திய இவர் கொயில் கொண்டிருப்பார். கோயில் கல் தூண்களிலும் இருப்பார்.

வடநாட்டில் 'பஜ்ரங் பலி' என்று அழைக்கப்பெறும் இவர், செவ்வாய்க் கிழமைகளில் விசேஷமாக வழிபடப்பெறுகிறார். அங்கு இவரது ஆலயங்கள் ஏராளமாக உள்ளன. தென்னாட்டிலும் எல்லா ஊர்களிலும் வாயு புத்ரர் கோயில் கொண்டுள்ளார். சுசீந்த்ரம், நாமக்கல், பரிக்கல், மேற்பாடி, கடையநல்லூர்க் க்ருஷ்ணாபுரம், காக்களூர், நல்லாட்டூர், நங்கைநல்லூர், மூர்த்திகள் ப்ரஸித்தமானவர்கள். மிக உயரமான அஞ்ஜனை புத்ரன் உருவத்தைக் கல்லிலோ சிமெண்டிலோ செய்து ஸ்தாபிக்கும் வழக்கம் ஸமீப காலத்தில் மலிந்து வருகிறது.

இமயம் முதல் குமரி வரை சிறப்புப்பெற்று விளங்கும் இந்த ராம தாஸ, ராம தூத, ஜிதேந்த்ரியனை முருக பக்தரான அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் பாடியிருக்கிறார்கள். 11 தலங்களில் அவர் பாடியுள்ளவை 93 பாடல்கள். 2006–இல் ஐயப்பன் அருட்புகழ், நவக்ரஹ அருட்புகழ் இரண்டு நூல்களையும் வெளியிட்ட ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை இந்த ஆண்டில் "ஆஞ்ஜநேயர் அருட்புகழ்" என்ற நூலை ஸ்வாமிகளின் ஏழாம் ஆராதனை நாளில் மாசி சுக்ல பஞ்சமி 21.2.2007–இல் வெளியிடுகின்றது.

மேற்பாடி, செங்கற்பட்டு, நங்கைநல்லூர், க்ருஷ்ணாபுரம், அநுமன் அருட்புகழ்ப் பாடல்கள் ஸாதுராம் ஸ்வாமிகளின் ஜீவிய காலத்திலேயே ஒரு முறை அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளன என்பது கருதத்தக்கது.

பீமஸேந ஸஹாயனின் பெருமைகள் பலவற்றையும் ஸ்வாமிகளின் அருட்புகழ்ப் பாடல்களைக் கவனித்துப் படிப்பார் உணர்வர் என்பது திண்ணம்.

ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளைக் கடைய நல்லூர்க் க்ருஷ்ணாபுரத்திற்கு அழைத்துச்சென்று, வயற்காட்டு ஆஞ்ஜநேயருக்கு அருட்கவிகள் பாட ஏற்பாடு செய்தவர் ஸ்ரீ D. அனந்த ஸுப்ரம்மண்யன் அவர்கள். இவர் ஸ்வாமிகளோடு பல ஆண்டுகளாகத் தொடர்பு கொண்ட அன்புமிகு திருப்புகழ் அடியார். பொன்விழாக் கண்டுள்ள சென்னைத் திருவல்லிக்கேணி முருகன் திருவருட் சங்கத்தின் செயலராகவும் பொருளாளராகவும் பல ஆண்டுகளாகப் பணியாற்றி வருபவர். ஹரி பஜனையிலும், பல தெய்வ நாமாவளிகள் பாடுவதிலும் ஆர்வம் மிக்கவர். நாமாவளிகளைத் தொகுத்து அச்சிட்டவர்.

'ஆஞ்ஜநேயர் அருட்புகழ்' நூலுக்கு அணிந்துரை ஒன்று எழுதித் தருமாறும், அதனை 21.2.2007–இல் பொங்கி மடாலயத்தில் வெளியிடுமாறும், 76 வயதான சுறுசுறுப்பான அந்த இளைஞரை வேண்டிக்கொண்டேன். அவரும் நூலை வெளியிட ஒப்புக்கொண்டு அணிந்துரை ஒன்றும் எழுதித் தந்துள்ளார். அவருக்கு என் நன்றிகலந்த நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதனை அழகாக அச்சிட்டுக் கொடுத்த "விஷுவல் கிராபிக்ஸ்" திரு. R. அப்பாசாமி அவர்கட்கு என் நன்றி உரியது.

ஸ்ரீராம பாத ஸேவா துரந்தரரான மாருதியின் பக்தர்களும் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளின் அடியார்களும் இப் புத்தகத்தை வாங்கிப் படித்துப் பாடி ஸ்வாமிகளின் ஆசிகளையும், அநுமனின் அருளையும் பெறவேண்டும் என்று பொங்கி மோநாம்பிகை திருவடிகளில் பணிந்து போற்றுகின்றேன்.

பொங்கி மடாலயம்,
நங்கைநல்லூர்,
சென்னை–61.
9.2.2007

ஸு.வே.ஸுப்ரம்மண்யன்
அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்

---

## அருட்கவி ஸாதுராம் ஸ்வாமிகள் பாடியுள்ள தெய்வங்கள்

அநுமன்
ஆண்டாள்
இடும்பன்
இராமர்
இராமலிங்கேச்வரர்
இலக்குமி
உத்தர குருவாயூரப்பன்
ஐயப்பன்
ஐயனார்
கணபதி
கணேசகிரிநாதர்
கருடாழ்வார்
கலியுக நாச்சியம்மை
கன்னிகா பரமேச்வரி
காளிகாதேவி
கிருஷ்ணர்
குருவாயூரப்பன்
சண்டிகேச்வரர்
சரபேச்வரர்
சரஸ்வதி
சித்ரகுப்தர்
சிவபெருமான்
சௌடாம்பிகை
தட்சிணாமூர்த்தி
திருமால்
திரௌபதி
துர்க்கை
நடராஜர்
நந்திகேச்வரர்
நரசிம்மர்
நவக்கிரகங்கள்
பார்வதி
பிரமன்
பொங்கி அம்மை
பொங்கி மோநாம்பிகை
பொன்னியம்மை
முத்துமாரியம்மை
முருகவேள்
ராதை
வீரபாகு
ஸப்த மாதா

## முற்கால, தற்காலப் பெரியோர்கள்

அகத்தியர்
அத்ரி
அருட்சக்தி அன்னை
அருணகிரிநாதர்
ஆதிசங்கரர்
ஆங்கிரஸர்
இரெட்டியப்பட்டி சுவாமிகள்
ஒற்றைவேட்டி சுவாமிகள்
கஞ்சமலைச் சித்தர்
கம்பர்
கருவூர்த்தேவர்
காச்யபர்
கௌசிக சுவாமிகள் (துவக மலை)
கௌதமர்
சட்டி ஸ்வாமிகள் (மாணிக்க சுவாமிகள்)
சந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதி சுவாமிகள் (காமகோடிபீடம்)
சாயிபாபா (ஷிரடி)
சிவஞான முனிவர்
சிவானந்த சுவாமிகள் (ரிஷிகேசம்)
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
சுப்பிரமணிய பிள்ளை வ.த.
சுப்பையா சுவாமிகள் (திண்டுக்கல்)
சுப்பையா சுவாமிகள் (திருக்கழுக்குன்றம்)
சுரைக்காய் சுவாமிகள்
சேக்கிழார்
சேஷாத்திரி சுவாமிகள்
திருஞானசம்பந்த சுவாமிகள்
திருநாவுக்கரசு சுவாமிகள்
திருவள்ளுவர்
பாம்பன் சுவாமிகள்
மங்கயர்க்கரசியார்
மாணிக்கவாசக சுவாமிகள்
மெய்கண்டார்
ரமண மகரிஷிகள்
வசிஷ்டர்
வள்ளிமலைத் திருப்புகழ் சச்சிதாநந்த சுவாமிகள்
விச்வாமித்ரர்
விலட்சணானந்த சுவாமிகள் (மேல் மாயில்)
ஜமதக்நி
ஜயேந்த்ர சரஸ்வதி சுவாமிகள்

---

வலம்புரிச்சங்கு

உ

**அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய ஆஞ்ஜநேயர் அருட்புகழ்**

## I. சென்னை–வடதிருமுல்லைவாயில் வைஷ்ணவி ஆலய அநுமன் அருட்புகழ்

(22–10–1960)

ராகம்–கல்யாணி) **அறுசீரடி ஆசிரிய விருத்தம்** (தாளம்–ஆதி

1. கல்லின் வல்ல என்நெஞ் சமும்வாழ் கற்பகம் வைஷ்ணவிமான்
கல்லின் வல்லி குடிகொள் முல்லை வாயிலிற் காண்புறுவார்
வில்லின் வல்ல விஜய ராமன் மெய்யடி யார்க்கடியார்
சொல்லின் செல்வர் ஆஞ்ஜ நேயர் தூமலர்த் தாள்தொழுவாம்.

*குறிப்புரை: கல்லின் வல்லி–இமயமலை அரசனின் புதல்வியாம் பார்வதி.*

## II. கருவூர் ரங்கநாதர் கோயில் ஆஞ்ஜநேயர் அருட்புகழ்

(27–6–1961)

நாதநாமக்ரியை) **அறுசீர் விருத்தம்** (ஆதி

2. ஊழினாற் பிரிந்து சென்ற ஒருத்தியை ஒருத்த னோடு
வாழுமா சேரச் செய்த வள்ளலை, தூது சென்று
பாழும்ஆ ணவத்தி லங்கைப் பகைவற்குப் பகைமை செய்து
வீழுமா கண்ட வஞ்சி அனுமனை விழைந்தர்ச் சிப்பாம்.

*ஒருத்தி–ஸீதை. ஒருத்தன்–ராமபிரான். பகைவன்–ராவணன். வஞ்சி–கருவூர் (கரூர்).*

## III. நீடாமங்கலம் அநுமன் அருட்புகழ்

(2–12–1964–இல் எண்7, வடக்குத் தெரு ஸ்ரீ S. வேணுகோபாலய்யர் அவர்கள் இல்லத்தில் பாடியருளப் பெற்றது.

நாதநாமக்ரியா) **கலி விருத்தம்** (ஆதி

3. அங்க ணன்னரி ஆளுடைத் தூதன்
பைங்க ணன்பரு வாயு பயந்த
பிங்க லன்,பெரு மாள்உறை நீடா
மங்க லத்தநு மன்கழல் வாழி.

*அரி–திருமாலாம் ராமன். பரு–பெரிய. வாயு–வாயு பகவான். பிங்கலன்–மஞ்சள் நிறத்தவன்.*

# IV. செங்கற்பட்டுக் கோட்டை ஆஞ்ஜநேயர் அருட்புகழ்

(19–6–66) அநுமன் திருமுன்

நாட்டை) **கலிவிருத்தப் பதினாறு** (ஆதி

4. அஞ்ச னைக்குமெய் யன்பில் உதித்தவோர்
மஞ்ச னைமணி யைவன வாஸனைச்
செஞ்ச வேசெங்கற் பட்டிற் சிறந்துவாழ்
மஞ்ச னைமொழி யார வழுத்துவாம். (1)

*அஞ்சனை–அஞ்சனா தேவி; இவள் வாயு தேவனுடைய தொடர்பால் அநுமனை ஈன்றாள். மஞ்சன்–மைந்தன். மணி–இரத்தினம் போன்றவன்–'ப்த்திரத்நம்'. வனவாஸன்–காட்டில் (கிட்கிந்தையில்) வசித்தவன். செஞ்சவே–நன்றாக. மஞ்சன்–அழகன். மொழி ஆர–சொற்கள் நிரம்ப; (அல்லது) பேச்சுச் சலிக்கும்படி. வழுத்துவாம்–தோத்திரம் செய்வோம்.*

5. கவிமு கத்தனைக் கைக்கணை யாழியைப்
புவிமு கத்துதித் தாள்பொருட் டாஅருள்
சவிமு கத்தனை ராகவ தாஸனைச்
செவிமு கத்தினாற் சீர்மடுத் துய்குவாம். (2)

*கவி–குரங்கு. கைக் கணையாழி–இராமர் கைவிரல் மோதிரம். புவிமுகத்து உதித்தாள்–பூமியிற் கிடைத்த பெண்ணான ஸீதை. உதித்தாள் பொருட்டு– உதித்தாளுக்கு. கு, பொருட்டு இரண்டும் நான்காம் வேற்றுமை உருபுகளேயாம். சவி–ஒளி, அழகு. ராகவதாஸன்–இராமனுக்கு அடியான். செவி முகத்தினால்– நமது காதுகளின் மூலம். சீர்மடுத்து–(அந்த அநுமனின்) சிறப்பியல்களையும் புகழையும் வாங்கிக் கொண்டு (கேட்டு). உய்குவாம்–பிழைத்துப் போவோம்.*

6. வாயு மைந்தனை வாநர வீரனைத்
தேயு வைச்சிறு வாலிடைச் சேர்த்தியே
காயு மாறிலங் கைக்கெரி யூட்டிய
வாயு வேகனை வாய்கொடு வாழ்த்துவாம். (3)

*வாயு–காற்று. வாநரம்–குரங்கினம். தேயு–அக்கினி. சிறுவால்–என்றது வாலின் சிறு நுனியை என்க. சேர்த்தி–கோத்துக்கொண்டு. காயுமாறு–கோபத்தினால் அல்லது இலங்கை யானது அனலால் காய்ந்து போமாறு. வாயுவேகன்–காற்றுப் போல விரைவுடையவன்.*

7. கோட ரத்தின் முகத்தனைக் கும்பிடும்
நாட கர்க்கறி யொண்ணா நலவனைச்
சேட தார்செங்கற் பட்டிற் றெரிந்துவாழ்
தோட மில்லியைச் சூழ்வலம் செய்குவாம். (4)

*கோடரம்–குரங்கு. கும்பிடும் நாடகர்–நாடகத்தால் கும்பிடுபவர்கள்; அதாவது வேஷதாரிகள்; உண்மைத் தெய்வ பக்தியற்றவர்கள். 'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான்'–திருவாசகம். நலவன்–நல்லவன்; நலத்தவன். சேடு அது ஆர்–சிறப்பு, பெருமை பொருந்திய. அது–அசை. தெரிந்து–தேர்ந்தெடுத்து. தோடமில்லி–தோஷமில்லாதவன்; குற்றம் அற்றவன். சூழ்வலம்–சூழ்ந்துவரும் பிரதக்ஷிணம்.*

**8.** ராம நாம ஜெபத்துள் ரமிப்பதாற்
காமம் இன்றிக் கடுந்தவம் ஆற்றுவார்
தாம டைந்திடாத் தானம தெய்திய
ராம தூதனை ரட்சிக்க வேண்டுவாம். (5)

*ரமிப்பது–இன்புறுவது. காமம்–காமம் முதலிய ஆசைகள். ஆற்றுவார்–செய்பவர்கள். தாம் அடைந்திடாத் தானம்–தனக்குக் கிடைக்காத பதவி; ராமபக்தர்களுட் சிறந்தோன் என்னும் தலைமைத் தானம், எய்திய–அடைந்த. ராமதூதனை–ராமருக்காகச் சீதா பிராட்டியிடம் தூது சென்றவனை. ரட்சிக்க–(நம்மை யெல்லாம்) காப்பாற்றும்படி.*

**9.** வலீமு கத்தின் முகத்தனை மாலையிற்
சிலீமு கங்கள் தெளிந்திசை பாடிட
ஒலீமு கங்கொளும் ஒப்பறு கையில்வில்
சிலீமு கங்கொளி சீடனைச் சிந்திப்பாம். (6)

*வலீமுகம்–குரங்கு, மாலை–துழாய்மாலை அல்லது (நறுமண) மலர்மாலை. சிலீமுகம்–வண்டு. ஒலீமுகம்–சங்கு. கை–இடக்கை. வில் சிலீமுகம்–வில்லும் அம்பும். கொளி–கொண்டவன்; இராமன். சீடன்–சிஷ்யன்; அநுமான்.*

**10.** ராவ ணாரி இராகவ பக்தனைத்
தேவ ருக்கரி தாயஸஞ் ஜீவியை
மாவ ரத்தால் மலைபெயர்த் தேகொணர்
நாவ லோனை நயந்திசை பாடுவாம். (7)

*ராவண அரி–இராவணனுக்குப் பகைவன். இராகவன்–இராமன். தேவருக்கு அரிது ஆய ஸஞ்ஜீவி–தேவர்களுக்கும் (மலை) பெயர்த்து எடுத்து வருவதற்கு அருமையான ஸஞ்ஜீவி என்னும் மூலிகை. மா வரத்தால்–மஹாவரங்களால்; பெரிய வர பலங்களினால். மலை பெயர்த்து–மலையை அடியோடு பேர்த்து. நா வ(ல்)லோனை–நாக்கு வல்லமை படைத்தவனை; பேச்சில் வல்லவனை; சொல்லின் செல்வனான அநுமனை. நயந்து–விரும்பி. இசை–இசையுடன் அல்லது புகழை.*

**11.** குரக்கி னத்துட் குணத்தடங் குன்றினை
அரக்க னுக்கொரு தூதறைந் தான்றனை
இரக்க நெஞ்சனைச் செங்கையுள் எய்திவாழ்
திரக்க வீசனைச் சேவித் தொழுகுவாம். (8)

*குரக்கு இனம்–குரங்கின் கூட்டம். தடம்–விசாலமான; பெரிய. அரக்கன்–இராவணாசுரன். தூது அறைந்தான்–இராமனுடைய தூது மொழிகளைச் சொன்னவன். இரக்க நெஞ்சன்–கருணையுள்ளம் படைத்தவன். செங்கை–செங்கற்பட்டு, திர–ஸ்திரமான; சிரஞ்ஜீவித்வம் வாய்ந்த; என்றும் அழியாத. கவீசன்–கபீசன்–குரங்கின் தலைவன்.*

**12.** இலக்கு வற்குயிர் ஈந்த ஒருத்தனைப்
பொலக்க னைப்புறம் போக்கிப் பொடித்தருள்
இலக்க வீரர்க் கிணையாம் ஒருவனை
நலக்க வேஅநு மானென நாடுவாம். (9)

*இலக்குவற்கு–லக்ஷ்மணனுக்கு. உயிர் ஈந்த–உயிரைக் கொடுத்த. ஒருத்தன்–ஒப்பற்றவன். இலக்குவன் மீது இராவணன் மஹாசக்தி ப்ரயோகம் பண்ணிய பொழுது, இலக்குமணன்*

*மூர்ச்சையுற்றுக் கீழே வீழ்ந்துவிட, இராமர் புலம்பி அழும் அப்போது அநுமார் ஸஞ்ஜீவியைக் கொணர்ந்து இலக்குவனைப் பிழைப்பூட்டினார். அதனால் 'லக்ஷ்மண ப்ராணதாதா' எனும் பட்டம் பெற்றார். பொல்-பொல்லாத; கொடிய. அக்கனை- அக்ஷகுமாரனை: இவனை ஆஞ்ஜநேயர் இலங்கையிற் தூதுபோய் வரும்போது காலாற்றேய்த்துக் கொன்று விடுகிறார். 'அக்ஷஹந்தாரம்'-ஹநூமத் ஸ்துதி. புறம்போக்கி-புறமுதுகிட்டு ஓடச் செய்து. பொடித்து-பொடி பொடியாய்ப் போம்படி அரைத்து. இலக்க வீரர்க்கு-லக்ஷம் போர் வீரர்களுக்கு. இணையாம்-ஒப்பான். ஒருவனை-ஒரே வீரனை. நலக்க-நன்றாக. அநுமான்என-ஹநுமானே என்றழைத்து.*

13. ஆஞ்ஜ நேயனை ஆசிரி யன்றனைத்
தோய்ஞ்ச நேயனைத் துப்புர வாளனைக்
காஞ்ச னாமகிழ் கன்னிய தீரனை
ஆய்ஞ்ச நெஞ்சர் அவலம் அறுப்பரே. (10)

*ஆஞ்ஜநேயன்-அஞ்சனா புத்திரன். ஆசிரியன்-ஆசார்யன்; பக்தர்களுக்கு ஞானாசாரியன். தோய்ஞ்ச நேயன்-நேயம் தோய்ந்தவன்; அன்பில் தோய்ந்திருப்பவன். துப்புரவாளன்-பரிசுத்தமானவன். காஞ்சனா-காஞ்சனை; லக்ஷ்மி, ஸீதாலக்ஷ்மி. கன்னிய-பெருமிதம் மிக்க. தீரன்-தைர்யமுடையவன். ஆய்ஞ்ச நெஞ்சர்-ஆராய்ந்து பார்த்துச் சிந்தித்துக் கொண்டே இருக்கின்ற மனத்தவர்கள். அவலம்-துன்பங்களை.*

14. சொல்லின் செல்வனைச் சுப்பிர ஸன்னனைக்
கல்லின் மேல்உருக் காண்சிரஞ் ஜீவியை
அல்லின் மேனியை ஆதிஸங் கீதனைச்
சொல்லின் வன்மையாற் சொல்லவும் வல்லமே! (11)

*சொல்லின் செல்வன்-பேச்சுத் திறமை படைத்தவன்; மஹாவாக்மி. கம்ப ராமாயணத்திற் சொல்லின் செல்வன் என்றே பேசப் பெறுகிறார் அநுமார். சுப்பிரஸன்னன்-மிகவும் ப்ரஸன்னமாக (விளக்கமாக)த் தோன்றுபவன். கல்லின் மேல் உருக் காண்-பாறைக் கல்லின்மீது உருவம் செதுக்கப் பெற்றுக் காணப்படுகின்ற. சிரஞ்ஜீவி-என்றும் அழியா வரம் பெற்றவன். அல்லின் மேனி-இருள் போன்ற திருமேனி படைத்தவன். அல் இல் மேனி-இருளற்ற ஒளிமயமான திருமேனி கொண்டவன் எனலுமாம். ஆதிஸங்கீதன்-இன்னிசைக்கு ஆதிகர்த்தா ஆனவன், இவருடைய ஸங்கீதத்தை ஹநுமத் ஸங்கீதம் என்பர். வல்லமே-வல்லமை உடையோமோ! (உடையோம் அல்லோம் என்றபடி.*

15. சகர சாகரம் தாண்டிய சூரனை
மகர சூடா மணியைப் பிராட்டிபாற்
புகர றப்பெற்றுப் புங்கவர் பாலருள்
சிகர ஜோதியைச் செந்தமிழ் ஓதுவாம். (12)

*சகர சாகரம்-ஸகரர்களால் தோண்டப் பெற்ற கடல். சூரன்-சூரத்தனம் உள்ளவன். மகர சூடாமணி-மகரமீன்போல் உருவம் பொறிக்கப் பெற்றிருந்த ஜடைபில்லை. சூடாமணி-மகளிர் கூந்தலணி வகை. மகரம்-விருப்பமுள்ள எனினுமாம். பிராட்டிபால்-சீதா பிராட்டியிடமிருந்தும். புகர்-குற்றம். புங்கவர்பால்-மேலானவரான ஸ்ரீராமபிரானிடத்தில். சிகரஜோதி-குன்றின் மேலிட்ட விளக்குப் போன்றவர். செந்தமிழ்-செம்மையான தமிழ்ப் பாடல்கள்.*

16. தோளின் மேல்இரு தூயரைத் தூக்கியே
வாளி எய்சமர் மாறவைத் தான்றனை

மீளி யைவிற லாளியை வெய்யசெங்
கோளி னைத்தொடர்ந் தானைக் குறிக்கொள்வாம். (13)

*தோளின்மேல்—தன்னுடைய புயங்களின் மீது. இரு தூயர்—இராம லக்ஷ்மணர்கள்; இவ்விருவரும் அநுமன் தோளிலிருந்து கொண்டு இராவணனோடு போரிட்டனர். வாளி எய் சமர்—அம்பைச் செலுத்துகின்ற போர். சமர் மாற—மாறி மாறிப் போரிட; அம்புகளை மாறி மாறிப் பொழியும் போரைச் செய்ய. மீளி—திண்ணியன்; மேன்மகன். விறலாளி—வெற்றியை ஆள்பவன். செய்ய செம் கோளினை—(கொடிய) சூட்டைத் தருகின்ற சிவந்த கிரஹமாகிய சூரியனை. தொடர்ந்தானை—(நவவியாகரணம் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆசையினால் சூரிய கதியில் அவனைத், தொடர்ந்து கூடவே சென்ற அநுமனை. குறிக்கொள்வாம்—(நம் தெய்வமாகக்) குறிக்கோள் கொண்டு வழிபடுவோம்.*

17. நவவி யாகர ணத்தின்நன் னாதனைக்
குவவு தோள்கொள் குரங்குருக் கோளனைச்
சிவன்உ ருத்திரத் தேவவ தாரனைத்
தவஒ ழுக்கனைத் தாள்பணிந் தேத்துவாம். (14)

*நவ...நாதன்—நவவியாகரண பண்டிதன் என்றொரு பேர் அநுமனுக்கு உண்டு; அந்த 9 இலக்கணங்களையும் சூரியனிடம் கற்றுத் தேர்ந்தான் அநுமன். நாதன்—பண்டிதனான தலைவன். குவவு தோள்—திரட்சி கொண்ட புயங்கள். குரங்கு உருக்கோளன்—குரங்கின் உருவங் கொண்டவன். சிவன் உருத்திரத்தேவு—சிவாம்சம் பொருந்திய ருத்ர மூர்த்தி. அவதாரன்—ருத்ரனே அநுமனாக அவதரித்தான் என்பது அருணகிரியார் கருத்துங்கூட: 'ருத்ரற் சிறந்த அநுமனென்றும்'—திருப்புகழ் (கருவடைந்து). தவஒழுக்கன்— தவம், ஒழுக்கம் இரண்டும் வாய்க்கப் பெற்றவன்.*

18. சீதை யின்துயர் தீர்த்தஎம் தெய்வத்தைக்
காதைக் காகுத்தன் நாமக் கணக்கில்வை
போதை யார்அநு பூதி மகாகவி
தாதை யைச்சர ணாஅரண் சாருவாம். (15)

*சீதையின் துயர்—சீதை இராமனைப் பிரிந்திருந்த துன்பம். துயர் தீர்த்த எம் தெய்வம்—'ஸீதா சோகாபஹாரீ'—ஆஞ்ஜநேய ஸ்துதி. காதை—தன்னுடைய காதுகளை. காகுத்தன் நாமக் கணக்கில்—இராமபிரானுடைய திருநாம ஸ்மரணங்களையும், ஸங்கீர்த்தனங்களையும் கேட்கும் பொறுப்பிலேயே. வை—வைத்திருந்த. போதை—மயக்கம்; மூதறிவு; ஞானம். அநுபூதி—ஞானாநுபவமும், பக்தி அநுபவமும் வாய்ந்த. மகாகவி—சிறந்த கவிஞர்; பெரிய கபிச்ரேஷ்டர்; குரங்கினத் தலைவர். தாதை—எனக்குத் தந்தை போல்பவர். சரணா—சரணாகதியாக. அரண்—காவலாக. சாருவாம்—சென்று சேர்வோம்.*

19. சீரை ஏந்தும் சிறிய திருவடிப்
பேரை ஏந்திய பிங்கலக் கண்ணனை
ஊரைச் செங்கையென் றோர்ந்துறை வான்றனைப்
பேரைப் பேசிப் பிணிபல போக்குவாம். (16)

*சீரை—சிறப்பை. சிறிய திருவடி என்பது அநுமாருக்கு ஸ்ரீ வைஷ்ணவத்திற் சொல்லப்படும் பரியாய நாமம். பேர்—பெயர். பிங்கலக் கண்ணன்—பொன் போல மஞ்சள் நிறம் படைத்த கண்களை உடையவன். 'பிங்களாக்ஷ: சிகாவான்'—ஆஞ்ஜநேய ஸ்துதி. ஊரை—தனக்கு ஊராக. செங்கை—செங்கற்பட்டு. ஓர்ந்து—ஆராய்ந்தறிந்து. பேரை—பெயரை அல்லது புகழை. பிணி—நோய்கள்.*

(ஆஞ்ஜநேயர் அருட்புகழ்க் கலிவிருத்தப் பதினாறு முற்றும்)

# V-A. மேற்பாடி ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் அருட்புகழ்– திருப்பள்ளி எழுச்சி

(25–12–1970 அன்று அருளிச் செய்யப் பெற்றது)

பூபாளம்) எண்சீரடி ஆசிரிய விருத்தம் (ஆதி

20. அஞ்ஜனை மைந்தனே! அநிலபுத் திரனே!
ஐவருள் வீமனுக் கானஸோ தரனே!
கஞ்ஜனை உயிர்கவர் கண்ணனை அந்நாள்
காகுத்த னாவரக் கண்டுகை தொழுதோய்!
முஞ்ஜனை ராவண வஞ்சனை இலங்கை
மூர்க்கனை ராகவ தூதனா முன்வெல்
மஞ்ஜனே! தொண்டைமேற் பாடியில் வீர
மாருதி யே! பள்ளி எழுந்தரு ளாயே! (1)

*அஞ்ஜனை–அஞ்ஜனா தேவி; அநுமனின் தாய். அநிலன்–வாயு. ஐவர்–பஞ்சபாண்டவர். கஞ்ஜன்– கம்ஸன். முஞ்ஜன்–உலோபி. மஞ்ஜன்–மைந்தன்–வலியவன்; அழகன். தொண்டை–தொண்டை நாடு; வீர மாருதி–வீராஞ்ஜநேயர்.*

21. ஆனைவந் ததுபசுப் போந்தது கமலம்
ஆடிநல் வீணைபுத் தகம்இரு நிதியம்
தேனைவண் டுணும்பிற மலர்வகை தேங்காய்
தீபங்கள் பூரணப் பொற்கல சங்கள்
பானைவண் தீம்பசும் பால்நவ மணிகள்
பாடுநா மணிபறை பார்க்கமுன் படைத்தோம்
வானைமண் வெல்லுமேற் பாடியில் வீர
மாருதி யே! பள்ளி எழுந்தரு ளாயே! (2)

*ஆடி–கண்ணாடி. இருநிதியம்–சங்க, பத்ம நிதிகள். நா–நாக்கு. வானை– தேவலோகத்தை.*

22. இலங்கிணி வதஞ்செயும் எதிரிலாத் திறலோய்!
இளம்பெரு மாள்இலக் குவன்றனக் குயிர்முன்
துலங்கிட ஸமயஸஞ் ஜீவினையக் கொணர்ந்து
துக்க நிவர்த்திசெய் ஸுகம்தரு மூலா!
இலங்கையைத் தீக்கிரை யாக்கிய நெடுவால்
எழுப்பிய கோட்டைமேல் இருந்திரா வணன்பால்
வலங்கிளத் தொருத்த! மேற் பாடியில் வீர
மாருதியே! பள்ளி எழுந்தரு ளாயே! (3)

*இலங்கிணி–லங்கிணி எனும் ராக்ஷஸியை. இளம் பெருமாள்–இளைய பெருமாள்; லக்ஷ்மணன். வலம்–ராமரின் வலிமையை. கிளத்து–எடுத்துச் சொன்ன.*

23. தும்பிகள் பறந்தன சூழ்ந்துரீங் காரத்
துமனியோ டுழவர்கள் கழனிவாய்ச் செல்லக்
கும்பிருள் நீங்கிற்றுக் குளிர்ந்தது காலை
கோயில்கள் திறந்தன வாயிலிற் சங்கம்

நம்பிகள் ஊதினர் நங்கையர் எல்லாம்
நாற்புறத் துந்திருக் கோலமிட் டுகுபூ
வம்பினில் தேன்மொய்மேற் பாடியில் வீர
மாருதி யே! பள்ளி எழுந்தரு ளாயே! (4)

*தும்பி–வண்டு. துழனி–ஒலி. கழனி–வயல். கும்பு–நிறைந்த. நம்பி–ஆண்களுள் சிறந்தோன். நங்கை–பெண்களுள் சிறந்தவள். கோலம்–பொடிக்கோலம்; இழை கோலம். உகு–சிந்திய. வம்பு–வாஸனை. தேன்–வண்டு.*

24. நாரதர் தமையும்இன் னிசையில்வென் றவனே!
நவஇலக் கணங்களும் நபோமணி பாற்கற்
றோரதர் வான்வழி உவனுடன் தொடர்ந்த
ஒப்பறு கருமம்கண் ணாயின ஒருவ!
நீரதத் திடையில்விண் மணியைச்செங் கனியா
நினைத்திள மையிற்கவுங் காற்சுடத் தாடை
வாரதள் சிவந்தமேற் பாடியில் வீர
மாருதி யே! பள்ளி எழுந் தரு ளாயே! (5)

*நபோமணி–சூர்யன். ஓர் அதர்–ஒரு பாதை. உவன்–அந்த சூர்யன். நீரதம்–மேகம். விண்மணி–சூர்யன். கவுங்கால்–கவ்விய போது. தாடை–கன்னம். வார்–நீண்ட. அதள்–தோல்.*

25. பிறையவன் ஜடையவன் விடையவன் எவர்க்கும்
பெரியவன் அரியவன் உரியவன் புகழ்க்கே
இறையவன் கறைக்களக் கறையவன் அடியார்க்
கெளியவன் அளியவன் தளியவன் இதயத்
துறையவன் குறையறு நிறையவன் பதினோ
ருருத்திரர் உருவனாம் ஒருவனின் வடிவோய்!
மறையவர் வாழுமேற் பாடியில் வீர
மாருதி யே!பள்ளி எழுந்தரு ளாயே! (6)

*உரியவன் புகழ்க்கே–புகழ்க்கு உரியவன். கறை–விஷம். களம்–கழுத்து. கறை–அடையாளம். அளி–கருணை. தளியவன் இதயத்து உறைபவன்–இதயத்தை இடைநிலைத் தீவகமாகக் கொண்டு இதயக் கோயிலினன், இதயத்துள் உறைபவன், எனக் கொண்டுகூட்டிப் பொருள் கொள்க. குறையறுநிறை–பரிபூரணம். ஒருவன்–ஒப்பற்ற சிவன்.*

26. பூக்கொடு வந்தனர் புண்ணியர் பூஜை
புரிந்திட அருந்தவில் மேளதா ளங்கள்
நோக்கொடு முழக்கவல் லுநர்பலர் நுழைந்தார்
நுன்திருச் சந்நிதி முன்தமிழ் வடசொல்
வாக்கொடு பயில்அடி யார்கணம் வந்து
வணங்கிமுன் காத்துநிற் கின்றது கோல
மாக்கொடு பொலியுமேற் பாடியில் வீர
மாருதி யே!பள்ளி எழுந்தரு ளாயே! (7)

*தவில்–தவுல் (தோற் கருவி). வல்லுநர்–வல்லமை படைத்தவர்கள். நுன்–உன்.*

27. ராமநா மஞ்சொல்லிப் பஜனைசெய் கின்ற
ரஹரஹ மாம்பக்தர் குழுக்கள்காத் துளவால்
நாமமே ருசியென நாக்கொடு ரஸித்த
நாயக னாஞ்சிரஞ் ஜீவிநீ துயின்றும்
நாமஹரா மந்திரம் ஜபித்தலை மறந்து
நழுவிடு மோ?நினக் கிதும்உப சாரம்
மாமதீ! எழுப்பல்;மேற் பாடியில் வீர
மாருதி யே!பள்ளி எழுந்தரு ளாயே! (8)

*நா–நாக்கு. மஹாமந்திரம்–தாரக நாமம். உபசாரம்–முகமன், மரியாதை. மாமதீ–மஹாமதீ; சிறந்த புத்திமானே! எழுப்பல்...உபசாரம் எனக் கூட்டுக.*

28. வெள்ளிலைக் கண்ணிவை தேஹிகை ஆழி
விதித்தவள் முடிமணி கொணர்ந்திரா கவன்கைக்
குள்ளிடக் கடல்கடந் துருப்பெருத் திலங்கைக்
கோடிமீண் டவ!புயத் திராமலக்ஷ் மணரை
நள்ளிவைத் தையிரு சிரனொடு பொருங்கால்
நன்குத வியபொலன் நிறக்கண்வா னரனே!
வள்ளிவெற் படுத்தமேற் பாடியில் வீர
மாருதி யே!பள்ளி எழுந்தரு ளாயே! (9)

*வெள்ளிலை–வெற்றிலை. வைதேஹி–ஸீதை. ஆழி–கணையாழி. முடிமணி–சூடாமணி. கைக்குள் இட–கையில் வைக்க. உருப் பெருத்து–விச்வரூபம் எடுத்து. நள்ளி–விரும்பி. ஐ இரு சிரன்–(5x2) பத்துத் தலையனாம் ராவணன். பொருங்கால்– சண்டையிடும்போது. பொலன்–பொன். வள்ளி வெற்பு–வடார்க்காடு மாவட்ட வள்ளிமலை.*

29. சூரியன் தோன்றமுன் அருணன்வந் துதித்தான்
சுந்தர மாய்வெளுத் திந்திரன் திசைகண்(டு)
ஆரியர் நவக்ரஹ தர்ப்பணம் செய்தார்
ஆலயம் தொழுவது சாலநன் றென்று
நாரியர் நறும்புன லாட நிவாநீள்
நதிப்புறம் போயினர் ஞாயிறு வரமீன்
வாரிஅ விந்தமேற் பாடியில் வீர
மாருதி யே!பள்ளி எழுந்தரு ளாயே! (10)

*அருணன்–சூர்யனின் தேர்ச் சாரதி. இந்திரன் திசை–கிழக்கு. ஆரியர்–வேதியர், நாரியர்–பெண்டிர். நறும்–நல்ல. நிவா–மேற்பாடிக்குக் கிழக்கில் ஓடும் ஆறு. ஞாயிறு–சூரியன். மீன் வாரி–நட்சத்திரக் (கடல்) கூட்டம். அவிந்த–ஒளி மழுங்கிப் போன.*

(ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் திருப்பள்ளியெழுச்சி முற்றும்)

# V-B. மேற்பாடி ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் உயிர் வர்க்க மாலை

நவரோஸ்) **கலிவிருத்தம்** (ஆதி

30. அஞ்ஜனை புத்திரன் அநில புத்திரன்
கஞ்சனை ஈன்றகா குத்தன் கௌஸலை
மஞ்சனை நெஞ்சினுள் வைத்த தூதுவன்
பஞ்சன செங்கையன் பதிமேற் பாடியே. (1)

*அஞ்ஜனை–அஞ்ஜனாதேவி. அநிலன்–வாயு. கம்ஜம்–(கம்) நீரில் (ஜம்) தோன்றும் தாமரை. கஞ்ஜன்–பிரமன். காகுத்தன்–ராமன். மஞ்சன்–மைந்தன். தூதுவன்–ராமதூதன். பஞ்ச–அ(ன்)ன–பஞ்சைப் போல் ம்ருதுவான. பதி–ஊர்.*

31. ஆதவன் பால்இலக் கணம்அன் றங்கறி
மாதவன் இன்னிசை மாண வல்லவன்
ஜாதவன் னெருப்பெரி பாரி ஜாதநற்
பாதவன் மாருதி பதிமேற் பாடியே. (2)

*ஆதவன்–சூர்யன். மாதவன்–மஹா தபஸ்வி. மாண–மிக. ஜாத வல் நெருப்பு–பிறவியாகிய கொடிய தீ. பாரிஜாத நல் பாதவன்–நல்ல பாரிஜாத வ்ருக்ஷத்தின் நிழலில் வாழ்பவன். பாதபம்–மரம். மாருதி–வாயு குமாரன்.*

32. இராவணன் பால்எரி இலங்கைக் கிட்டவன்
தராவணங் கிலக்குமி ஜநகி வத்ஸலன்
இராவணம் எற்கயன் எழுத்தைச் செய்தருள்
பராவணன் வீற்றருள் பதிமேற் பாடியே. (3)

*பால்–இடத்தில். இலங்கைக்கு எரி இட்டவன் என அந்வயிக்க. எரி–தீ. தரா அணங்கு–பூமி தேவி பெற்ற தெய்வப்பெண்; ஸீதை. தரா–பூமி. வணங்கு–பணியும் இலக்குமி எனலுமாம். ஜநகி வத்ஸலன்–ஜாநகியின் வாத்ஸல்யம் (அன்பு) உடையவன். எற்கு–எனக்கு. அயன் எழுத்தை–ப்ரம்ம லிபியை இராவ(ண்) ணம்–இல்லாது போகும்படி. பராவணன்–பராசக்தியின் படிவமாகவே இருப்பவன். வீற்றருள்–வீற்றிருந்தருளும்.*

33. ஈசனின் அங்கிசன் இராம பக்தர்தம்
நேசனாய் நித்தியப் பிரம சாரியாய்த்
தாசனாய்த் தசரத தநயற் கன்புசெய்
பாசனாய் வாஸஞ்செய் பதிமேற் பாடியே. (4)

*ஈசன்–ருத்ரன். அங்கிசன்–அம்சத்தவன்; அநுமன் ருத்ராம்சத்தவன். நித்திய–என்றும். பிரமசாரி–திருமணமாகாதவன். தாசன்–தொண்டன். தசரத தநயன்–ராமன். பாசன்–பற்றுடையவன். வாஸம்–வாழ்வு.*

34. உத்தமன் சுந்தர காண்டத் தோதுசீர்
மெத்தவுங் கொண்டவன் வீர தீரன்அங்
கைத்தலத் திற்கணை யாழி காகுத்தன்
பத்திநிக் கீந்தவன் பதிமேற் பாடியே. (5)

*சீர்–சிறப்பு. மெத்த–மிக. வீரதீரன்–வீர ஆஞ்ஜநேய ஸ்வாமி. அம் கைத்தலம்–அழகிய கை. கணையாழி–மோதிரம். காகுத்தன் பத்நிநி–ராமன் மனைவி; ஸீதை.*

35. ஊர்புகழ் ஆஞ்ஜநே யப்பேர் உள்ளவன்
ஆர்புகழ் மைதிலிக் கடிமை ஆயினோன்
நேர்புகழ் வேறிலா அநுமன் நீதிமான்
பார்புகழ் பண்டிதன் பதிமேற் பாடியே. (6)

*ஊர்–மேற்பாடியூர். ஆர்புகழ்–கீர்த்தி நிறைந்த. மைதிலி–ஸீதை. அடிமை–ஸேவகன். நேர்புகழ்–புகழில் தனக்கு ஸமாநம். பார்–உலகம். பண்டிதன்–கல்விமான்.*

36. எம்பிரான் இராகவற் கினிய ஏவலாள்
நம்பிரான் பிங்கலக் கண்ணன் நாட்டவர்
தம்பிரான் கம்பர்வான் மீகி சாற்றுசீர்
பம்பிரா மாயணன் பதிமேற் பாடியே. (7)

*ஏவல் ஆள்–அடியவன். பிங்கலக் கண்ணன்–பொன் போல் மஞ்சள் நிறமான கண்களைக் கொண்டவன். நாட்டவர்–நாட்டிலுள்ளவர்கள். சீர் பம்பு–புகழ் நிறைந்த. இராமாயணன்–ராமாயணத்தில் முக்கிய பாத்ரமானவன்.*

37. ஏதமில் இலக்குவற் கெனச்சஞ் ஜீவியம்
பூதரம் கொணர்ந்தவன் பொருவில் வீமனின்
ஸோதரன் முத்தமிழ்ச் சொல்லின் செல்வன்வான்
பாதலம் நீண்டவன் பதிமேற் பாடியே. (8)

*ஏதம் இல்–குற்றமற்ற. இலக்குவற்கு என–லக்ஷ்மணனுக்காக. சஞ்ஜீவி அம் பூதரம்–ஸஞ்ஜீவி பர்வதத்தை. பொரு(வு)இல்–நிகரில்லாத. வீமன் வாயு புத்ரன்; அநுமனும் வாயு குமாரனானதால் பீமனின் ஸஹோதரனானார். முத்தமிழ்–இயல், இசை, நாடகம். 'முத்தமிழ் அடைவு' எனப் பாரதத்தை அருணகிரியார் 'கைத்தலம் நிறைகனி' திருப்புகழில் தெரிவித்தது போல ஈண்டு வால்மீகி (கம்ப) ராமாயணம் 'முத்தமிழ்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. வான் பாதலம் நீண்டவன்–ஆகாசத்துக்கும் பாதாளத்துக்குமாக நீண்டு நிமிர்ந்து உயர்ந்து நின்று விச்வரூபம் எடுத்தவன்.*

38. ஐயிரு தலையனை அதட்டி வென்றவன்
மையிருள் இலங்கிணி அட்சன் மாளவை
கையிரண் டும்தலைக் கண்வை பக்திமான்
பையிரண் டமைமுகன் பதிமேற் பாடியே. (9)

*ஐ இரு தலையன்–பத்துத் தலை கொண்ட ராவணன். அதட்டி–மிரட்டிப் பேசி. மையிருள்–மை இருட்டுப்போன்ற வடிவினள். இலங்கிணி–லங்கையைக் காவல் செய்த ராக்ஷஸி. அக்ஷன்–அக்ஷகுமாரன். மாள வை–அழிய வைத்த. கை...பக்திமான்–அஞ்ஜலி பந்த ஹநுமான். பை இரண்டு அமை முகன்–இரண்டு தாடைகளும் இரண்டு (பெரும்) பைகள் போல அமையப் பெற்ற (குரங்கின்) திருமுகத்தை உடைய கபீசன்.*

39. ஒன்பது வ்யாகர ணமுமுன் போர்ந்தவன்
என்பது ஜகம்தெரி ஏந்தல் ஈரொண்பேர்த்
தன்பது மப்புயஞ் சமரிற் றாங்குபூ
பன்பது மைப்ரியன் பதிமேற் பாடியே. (10)

*ஒன்பது வ்யாகரணம்–நவ வ்யாகரணம். ஓர்ந்தவன்–சூர்யனிடத்தில் (கற்று) அறிந்து கொண்டவன். என்பது–என்ற விஷயம். ஜகம்தெரி–உலகறிந்த. ஏந்தல்–சிறந்த ஆண்மகன். ஈர்ஒண்பேர்–இரண்டு சிறந்த புருஷர்களாம் ராம லக்ஷ்மணர்களை. தன் பதுமப்புயம்–தனது தாமரை போல் ம்ருதுவான தோளில். சமரில்–ராமராவண யுத்தத்தின் போது. தாங்கு பூபன்–ஏந்திச் சண்டையிடச் செய்த அரசன்; கவிராஜன். பதுமை ப்ரியன்–லக்ஷ்மியாம் ஸீதைக்கு அல்லது பதுமை (பாவை) போல்வாளாம் ஸீதைக்குப் ப்ரியமானவன்.*

**40.** **ஓதமுந் நீர்க்கடல் உடனே தாண்டினோன்**
**கீதஸங் கீதமிற் கேண்மை மிக்கவன்**
**மாதவஞ் செய்தவன் வந்திப் பார்வினை**
**பாதகந் தீர்ப்பவன் பதிமேற் பாடியே.** **(11)**

*ஓதம்–ஈரக் காற்று. முந்நீர்–ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்னும் மூவகைத் தண்ணீர். கீதஸங்கீதம்–பாட்டுடன் கூடிய இன்னிசை. சங்கீதமில்–ஸங்கீதத்தில்; அத்து சாரியை தொக்கி வந்தது. கேண்மை–நட்பு விருப்பம். வந்திருப்பார்–வழிபடுவார். வினை–நல்வினை, தீவினை என்னும் இருவினைகள். பாதகம்–பொய், கள், கொலை, களவு, காமம் என்னும் பஞ்சமா பாதகங்கள்.*

**41.** **ஔவியம் இல்லவன் அநுமான் அன்பர்பாற்**
**பவ்வியம் பாவிப்போன் பரன்இ ராமன்பேர்**
**செவ்விய சிந்தையாற் ஜெபஞ்செய் வோன்தலம்**
**பவ்வம்நேர் பொன்னைசூழ் பதிமேற் பாடியே.** **(12)**

*ஔவியம்–பொறாமை. இல்லவன்–இல்லாதவன். அநுமான்–ஹநுமான். அநு–தாடை; சிவந்த தாடையாற் சிறப்புப் பெற்றவன் என்பது பொருள். பவ்வியம்–பணிவு. பாவிப்போன்–கொண்டாடுபவன். பரன்–கடவுள். ராமன்பேர்–ராமநாமத்தை. செவ்விய–செம்மையான. தலம்–ஊர். பவ்வம்–கடல். நேர்–போன்ற. பொன்னை–நிவா நதி.*

(மேற்பாடி ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் உயிர்வர்க்க மாலை முற்றும்)

# V-C. மேற்பாடி ஸ்ரீ வீராஞ்ஜநேய ஸ்வாமி அருட்புகழ் இரட்டை நவரத்ந மாலை

(2.6.1980)

## 1. காப்பு (நேரிசை வெண்பா)

**42.** **மேற்பாடி மேவும்ஒரு வீராஞ்ஜ நேயர்அவர்**
**மேற்பாடிப் பாமாலை மெய்யுருவி – னாற்பாடிச்**
**செம்மா நவரத்ந மாலை சிலசாத்தக்**
**கைம்மா முகன்கழலே காப்பு.**

*மேற்பாடிப் பாமாலை – மேல் பாடு இப் பாமாலை எனப் பிரிக்க. மேல்–மீது. மெய் உருவினால்–மெய் உருவினை. இரண்டாம் உருபுக்குப் பதிலாக மூன்றாம் உருபு வந்த உருபு மயக்கம். செம்– செம்மையான, மா–சிறந்த. சாத்த– அணிய.*

---

மேற்பாடி ஸ்ரீ வீராஞ்ஜநேயர் கோயில் குடமுழுக்கு மலருக்காக அருளப் பெற்ற பாடல்கள் இவை. ஒவ்வொரு பாடலிலும் 2 ரத்நங்கள் கூறப்பெற்று இருப்பதால் இது இரட்டை நவரத்நமாலை எனப்பட்டது.

## 2. நூல் (நேரிசை வெண்பா)

### 1. மாணிக்கம்

43. மாணிக்கக் கட்டிபோல் வண்ணன்மேற் பாடிஊர்க்(கு)
ஆணிக் கநகம் அனையபிரான் – பாணிக்கை
ஸஞ்ஜீவி வீராஞ்ஜ நேயன் ஸதாதொழுவார்
தஞ்ஜீவி தன்மரக தன். (1)

*ஆணிக் கனகம்–உயர்ந்த மாற்றுடைய பொன். பாணிகை–கரம், ஒரு பொருட் பன்மொழி. கை ஸஞ்ஜீவி–இடது கையில் ஸஞ்ஜீவி மலையை ஏந்தியவன். தம் ஜீவிதன்–உயிர் வாழக் காரணம் ஆனவன். மரகதன்– மரகத ரத்நம் போன்றவன்.*

### 2. மரகதம் (கட்டளைக் கலித்துறை)

44. மரகத வண்ணன் மழைவண்ணன் நீல மணிவண்ணன்மைக்
குரகத வண்ணன் குலராமன் தூதன் கொடிநெடுவால்
உரகதம் ஒத்துடை வீராஞ்ஜ நேயன் உறைவிடமாம்
பரகதி நல்குமேற் பாடிபூ மார்பிற் பவழமன்றே. (2)

*மை–கரிய. குரகதம்–குதிரை. கொடி–நீண்ட. உரகதம்–பாம்பு. சீறும் சர்ப்பம் போல ஆகாயத்தில் பறந்தவன் எனினுமாம். பூ–பூமி.*

### 3. பவளம் (அறுசீர் வ்ருத்தம்)

45. பவளம்போல் வாய்இ தழ்த்தாய் மைதிலி பாதம் பற்றி
அவளையும் அவள்கோ னான அவனையும் பரவும் அன்பன்
தவளவெண் கொடிமேற் பாடித் தலத்தன்வீ ராஞ்ஜ நேயன்
எவளவும் மறவார்க் கின்பன் எழில்மேனி நிறம்நீ லம்மே. (3)

*தவளம்–வெண்மை. வெண் கொடி மேற்பாடி–வெள்ளைக் கொடி பறக்கும் மேற்பாடி. எவளவும்–எவ்வளவும்.*

### 4. நீலம் (கலிநிலைத்துறை)

46. நீல கண்டனாம் உருத்திரன் நீடுருக் கொண்டோன்
கால கண்டன்மேற் பாடியிற் காண்தனிக் கடவுள்
வேல கண்டன்வேள் வள்ளிமா மலைமிசை மேயோன்
போல கண்டவீ ராஞ்ஜநே யன்வைரப் பொலிவோன். (4)

*கால கண்டன் மேற்பாடி–கரிய கழுத்தராம் ஸோமநாதேச்வரர் கோயில் கொண்ட மேற்பாடி. வேல கண்டன் வேள்– அகன்ற இலை வேலையுடைய முருகன். வேலவேள், கண்டன் வேள் எனினும் ஆம். கண்டன்–வீரன் ஆன.*

### 5. வைரம் (கொச்சகக் கலிப்பா)

47. வைரப் பொலிவாரும் வஜ்ராங்க மாவலிசெங்
கைரவம்பூக் கும்கழனி மேற்பாடிக் கண்ணுறைவோன்
வைரவன்போ லும்வீர மாருதிவை தேஹிபக்தன்
மெய்ரவிபோன்ம் மேனிஒளி மின்னும்கோ மேதகமே. (5)

*வஜ்ராங்க மாவலி–பஜ்ரங் பலி என்ற அநுமனைக் குறிக்கும் வடநாட்டுச் சொல்லின் தமிழ்*

*வடிவம். கைரவம்–ஆம்பல். போன்ம்–போன்ற.*

### 6. கோமேதகம் (கலி வ்ருத்தம்)

48. கோமேதக மாலாமணிக் கோமான்செல்வச் சீமான்
மாமேதகு மேற்பாடியில் வரும்வீரநல் அநுமான்
மீமேதியின் வருவான்எமன் வெருட்டும்பயம் விரட்டும்
கோமேதிநி மகள்கோன்மகிழ் வயிடூரியக் குணனே. (6)

*மேதியின் மீ–எருமைக் கடாவின் மீது. கோ, மேதினி–பூமி. ஒருபொருட் பன் மொழி. மகள்–பூமிமகள். கோன்–திருமாலாம் ராமன்.*

### 7. வைடூர்யம் (இன்னிசை வெண்பா)

49. வயிடூரி யக்குணங்கொள் வாயுதரு மைந்தன்
மயிடாரி ஊர்க்கழகார் மேற்பாடி வாழ்வள்ளல்
வீராஞ்ஜ நேயன் வியன்கழல்என் சென்னிமுடிக்
காராஞ்ச புட்பரா கம். (7)

*மயிடாரி–உமையாம் மஹாதபஸ்க்ருதீ தேவி. வியன்–சிறந்த, ஆராஞ்ச–ஆராய்ந்த.*

### 8. புஷ்பராகம் (கலி வ்ருத்தம்)

50. புட்ப ராகமாம் பற்பரா கம்பொலி
திட்ப மான செழுங்கிரீ டச்சிரன்
தட்ப நீர்ப்பொன்னை சார்ந்தமேற் பாடியான்
நுட்பன் வீர ஹநுமந்தன் நொய்ம்முத்தே. (8)

*பற்பராகம்–பத்ம ராகம். திட்ப–வலிமை. தட்ப–குளிர்ந்த, நுட்பன்–நுண்ணியன். நொய்–நேர்த்தி. நுண்மை, மென்மை.*

### 9. முத்து (14சீர் விருத்தம்)

51. முத்துமா லைப்பரிசு ஜாநகி கொடுத்துதவ
முத்தங்கள் அத்தனையையும்
மோந்தும் கடித்தும்அதில் ராமநா மச்சுவை
முகிழ்க்காமை கண்டுதறி னோன்
பத்துமா தங்கள்சிறை வாழ்ந்தஸீ தைத்தலைவி
பர்த்தா வுடன்சேரு மா
பணிசெய்து கணியாழி சூடாம ணிப்பணிகள்
பரிவர்த்த நம்செய் தவன்
ஒத்துமா வாம்அருந் தவநா யகிக்குரிய
உயர்ஸோம நாதன் உறைஊர்
ஒலியலாம் நூகாக் கரைக்கண்மேற் பாடிஒளிர்
ஒருவன்வீ ராஞ்ஜ நேயன்
வைத்துமா தவர்கள்மறை வல்லுநர்கள் சேர்ந்துசெயும்
வான்குட முழுக்கு விழவில்
மகிழ்கின்ற நெகிழ்கின்ற புகழ்கின்ற திகழ்கின்ற
மாருதியென் மாணிக்கமே. (9)

முகிழ்க்காமை—காணப்படாமை. பர்த்தா—கணவன். பரிவர்த்தனம்—மாற்றுதல். அருந்தவ நாயகி—மாஹா தபஸ்க்ருதீ தேவி. ஒலியல்—நதி. நூகா—மேற்பாடியில் ஓடும் நிவா நதி.

### 3. நூற்பயன்

ஏழுசீரடி ஆசிரிய விருத்தம்

52. விரவுமேற் பாடி வீராஞ்ஜ நேயர்
மேல்நவ ரத்நமா லைப்பேர்
பரவுநூற் பயின்று பக்தியாய்ப் பாடிப்
பணிபவர் பயம்பிணி இன்றி
வரவுபோக் கற்றுப் புத்திவன் பலம்பேர்
வாக்கினில் வன்மைதை ரியம்உற்(று)
இரவுபோய்ப் பகல்போய் இகந்தவீட் டின்பம்
எய்துவர் உய்குவர் எளிதே.

பயம்பிணி ... தைரியம் உற்று—புத்திர் பலம் எனத் தொடங்கும் சுலோகத்தை ஒப்பிடுக. வரவுபோக்கு அற்று—பிறத்தல், இறத்தலை நீக்கி. இரவு போய்ப், பகல்போய்—இரா, பகல் இல்லா முக்தி வீடு. எய்துவர்—அடைவர்.

(வீராஞ்ஜநேயர் இரட்டை நவரத்நமாலை முற்றும்)

## VI. நங்கைநல்லூர் வரஸித்தி விநாயகர் கோயில் ஆஞ்ஜநேயர் *போற்றிப் பஞ்சகம்

வாசஸ்பதி) அறுசீரடியாசிரிய விருத்தம் (ஆதி

53. அஞ்சனை மைந்தா! போற்றி! அநிலபுத் திரனே! போற்றி!
கஞ்சம்நேர் கழல்இ ராமன் காகுத்தற் கடிமை! போற்றி!
வஞ்சனை இலாதாய்! போற்றி! மஞ்சனே! போற்றி! நோய்க்கு
நஞ்சன நங்கை நல்லூர் நகராஞ்ஜ நேயா! போற்றி! (1)

அநிலம்—காற்று; வாயு பகவான். கஞ்சம்—தாமரை. காகுத்தன்—இராமன்; ககுஸ்த வம்சத் துதித்தவன். மஞ்சனே—அழகனே. நோய்க்கு நஞ்சு அன... ஆஞ்ஜநேயா : விடம் உயிரைப் போக்கும். அதுபோல் மக்களின் நோய்களை (விடம் போல் இருந்து) நீக்க வல்ல அநுமான் என்றபடி. பாம்பின் விஷம் மருந்தாகவும் தற்காலத்தில் பயன்படுத்தப் பெறுவது கண்கூடு.

ஆகிரி) (ஆதி

54. புந்தியிற் பெரியாய்! போற்றி! பூஜனைக் குரியாய்! போற்றி!
நந்தியின் அமிசங் கொண்ட நவவியா கரணா! போற்றி!
செந்திரு மகளாம் ஸீதை திருக்கையில் ஆழி சேர்த்த
நந்திரு மகனே! போற்றி! நங்கைநல் லூராய்! போற்றி! (2)

புந்தி—புத்தி. நந்தி—திருநந்தி தேவர்; சிவபிரான் எனினுமாம்: 'ருத்ரற் சிறந்த அநுமன் என்றும்' திருப். 'கருவடைந்து'. ஆழி—கணையாழி. நந் திருமகனே—நமது சீமானே!

*27 போற்றிகள் வரும் இந்த ஐந்து பாடல்களையும் 4 முறைகள் ஓதினால் 108 போற்றிகள் கூறியதாக (அஷ்டோத்தர சத நாமார்ச்சனையாக) ஆகும்.

ஆபோகி) (ஆதி

55. இலங்கையை எரித்தாய்! போற்றி! இராமன்நற் றூதா! போற்றி!
வலங்கையிற் கதையாய்! போற்றி! இடக்கைம்மா மலையாய்! போற்றி!
இலங்கைமன் இராவ ணற்கோர் எதிரியாய் இருந்தாய்! போற்றி!
நலங்கைக்கொள் நங்கை நல்லூர் நகர்அநு மானே போற்றி! (3)

*வலங் கை–வலது கை வலக் கை என்பது எதுகை நயம் கருதி வலங்கை என வந்தது. மலை–ஸஞ்ஜீவி மலை. வலக் கையில் கதையையும் இடக்கையில் ஸஞ்ஜீவி மலையையும் ஏந்தியுள்ள தோற்றத்தை இரண்டாவது வரி குறிக்கின்றது. மன்–மன்னன். நலம் கைக்கொள்...அநுமான்–நன்மையையே கைக்கொண்ட அநுமன்; நலத்தை ஊருக்கும் ஆக்கலாம்.*

பீம்ப்ளாஸ்) (ஆதி

56. இன்னிசை வலவா! போற்றி! இராகவற் கினியாய்! போற்றி!
துன்னிய மாணித் தன்மை தொகுசொல்லின் செல்வா! போற்றி!
தன்னிகர் இலாத பக்திச் சாம்ராஜ்ய ராஜ! போற்றி!
நன்னிய மத்தாய்! போற்றி! நங்கைநல் லூராய்! போற்றி! (4)

*வலவா–வல்லவனே! துன்னிய–நெருங்கிய; நிறைந்த. மாணித்தன்மை–ப்ரம்மசர்யம். தொகு–தொகுதியாக அமையப் பெற்ற. சொல்லின் செல்வன்–இது கம்பர் தம் இராமாயணத்தில் அநுமனுக்குச் சூட்டியுள்ள பட்டப் பெயர். தன் நிகர்–தனக்கிணை. பக்திச் சாம்ராஜ்ய ராஜ–பக்திப் பேரரசுக்கு அரசனே! (அதாவது பக்தியில் அவ்வளவு உயர்ந்தவனே! நல் நியமத்தாய்–நல்ல ஒழுக்கமுடையவனே!*

வஸந்தா) (ஆதி

57. சொல்லிரா மாய ணத்திற் சுந்தர காண்டந் தன்னில்
நல்லிரா கவன்க தைக்கு நாயகா! போற்றி! போற்றி!
எல்லிரா, நங்கை நல்லூர் இடம்அக லாதாய்! போற்றி!
வில்லிரா மனைப்பேண் பக்த விஜயமா ருதியே! போற்றி! (5)

*சொல்–சொல்லப்படுகின்ற. சுந்தர காண்டத்திற் கதா நாயகன் ஆஞ்ஜநேயரே என்பது மரபு. எல்–பகல். இரா–இரவு. வில்லி+ராமன் அல்லது வில்+இராமன் என எப்படியும் பிரிக்கலாம். பேண்–விரும்பி வழிபடும். பக்த மாருதி, விஜயமாருதி என்க. நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் அநுமன் அஞ்ஜலி பத்த ஹநுமானாய்ப் பக்த மாருதியாகத்தான் காட்சியளிக்கிறார். விஜயமாருதி–எங்குப்போனாலும் பெரும் வெற்றி கண்டே மீளும் திறம் படைத்தவர் அநுமார் ஆதலின் விஜயமாருதி எனப்பட்டார்.*

(நங்கைநல்லூர் ஆஞ்ஜநேயர் போற்றிப் பஞ்சகம் முற்றும்)

# VII. பாலவேடு கிராமம் பட்டாபிராம் ஸ்ரீ சாரதாம்பிகா ஸமேத ஸ்ரீ ஸோமநாதேச்வரர் ஆலய அநுமன் அருட்புகழ்

(கும்பாபிஷேக நாளில் (14–9–1972) அருளப் பெற்றது.

அநுமதோடி) **அறுசீரடி விருத்தம்** (ஆதி

58. பட்டாபி ராமற் கின்பத் தூதனைப் பக்திக் கோனை
மட்டாரும் கூந்தல் நல்லாள் மைதிலிக் கன்புத் தொண்டு
நட்டானை ஞானம் மிக்க நலத்தானைப் பாலை வீட்டுப்
பட்டாபி ராமன் என்னப் பட்டானைப் பணிந்துய் வோமே.

*மட்டு ஆரும்–தேன் உள்ள மலர்களை அணிந்த. நட்டானை–விரும்பியவனை. பாலைவீடு–பாலவேடு என்னும் கிராமம் சென்னை–600 055 பட்டாபிராம் மிலிடரி ஸைடிங் என்னும் இடம். பட்டாபிராமன்– பட்டாபிராம் என்னும் ஊரைச் சார்ந்தவன்.*

# VIII-A. கடையநல்லூர்க் க்ருஷ்ணாபுரம் வயற்காட்டு ஆஞ்ஜநேயர் அருட்புகழ்ப் பதிகம்–1

(2–12–1992–இல் ஆசு கவியாய்ப் பாடியருளியது)

தோடி) **அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்** (ஆதி

59. பெரிய பெருமாள் திருஅரங்கர்ப்
பேணும் பெரிய திருவடிபோல்
உரிய ராம பிரான்அடியே
உணர்ந்து போற்றும் சிற்றடியே!
பிரிய! சிறிய திருவடியே!
பேச்சில் வல்ல சொற்செல்வா!
அரிய க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (1)

*பெரிய திருவடி–கருடாழ்வார். சிறிய திருவடி–அநுமன்.*

60. கண்ணா ளா!எம் காகுஸ்த்தன்
கருணைக் கடைக்கண் ஏவல்செயும்
திண்ணா ளா! நம் ஜெயவீர
தேவா! தேவர் பதி,மயன்தாழ்
பண்ணா ளா!நா ரதர்பணியும்
பகவா னே!மா ருத்திரனே!
அண்ணா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (2)

*காகுஸ்த்தன்–ககுத்ஸ்த வம்சத்தில் வந்த ராமன். திண்ணாளன்–சரீர பலம் வாய்ந்தவன், மயன்–அசுரத் தச்சன். இராவணன் மனைவியாம் மந்தோதரியின் தந்தை. ருத்திரனே–ருத்ராம்சம் பொருந்தியவனே. அண்ணா–பெரியவனே.*

ரஞ்ஜநி)

61. கையால் தலைமேல் மிகக்கூப்பிக்
கணமும் மறவா நாமஜபம்
செய்யா நின்றி ராமஎன
ஜெபிக்கும் தவத்திற் பெரியோனே!
மையார் கண்ணி ஸீதைபதம்
வணங்கும் விஜய மாருதியாம்
ஐயா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (3)

*செய்யா நின்று–செய்து. மை–கண் மை, கருமை நிறம் எனினுமாம்.*

62. பழகும் அடியார் இடைநடுவே
பயின்று பகவன் நாமம்எலாம்
ஒழுகும் திருவாய் உளத்தாரோ(டு)
உற்றே ராம பஜனைசெயும்
குழகா! குரங்கின் திருமுகமார்
குருவே! திருவே மிகக்கொடுக்கும்
அழகா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (4)

*குழகு – அழகு, இளமை. குருவே–குரு ஸ்தாநம் உடையவனே.*

பூர்வி கல்யாணி) (ஆதி

63. தெளிவார் தெய்வ ஸுயம்பிரபைத்
தீர்த்தக் கரையிற் கோயில்கொண்டாய்!
பொளிவார் வெள்ளைப் பொடிமலிந்த
பூமி அடியார் சூழல்உற்றாய்!
உளியாற் செதுக்காக் குஹைகள்பல
உன்பால் மஹிக்குள் உடையவனே!
அளியார் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (5)

*சுயம்பிரபை–வயற்காட்டு அநுமான் கோயிலுக்கு அருகில் உள்ள தீர்த்தத்தின் பெயர். இந்திரனால் விரும்பப் பெற்றுப் பூலோகத்தில் தங்கியிருந்த தேவ லோகப் பெண்ணின் கூடவே இருந்த தோழி சுயம்பிரபை. அந்த அப்ஸரப் பெண் இந்த்ரலோகம் சென்றபின் தோழி இங்கேயே தங்கி விட்டாள். தவம் செய்து வந்தாள். அநுமானுக்கும் மற்ற வானரருக்கும் ரிக்ஷபிலம் என்னும் அக்குகையில் உணவளித்துப் பசியாற்றியவள். அவள் பெயரால் அழைக்கப்படுகிறது இந்தத் தீர்த்தம். தீர்த்தத்தின் ஒரு புறத்தில் காணப்பெறும் (தற்பொழுது மூடப் பெற்றிருக்கும்) குஹைதான் ராமாயணத்தின் ரிக்ஷபிலம் என்பது இவ்வூரின் ஐதிஹ்யம். பொளிவு–ப்ரகாசம். வெள்ளைப் பொடி–திருநீறு. மஹி–பூமி. அளி–கருணை.*

64. தேயம் ஆன பாரதத்தில்
தென்பால் நோக்கித் திருக்கொலுக்கொள்
சேய முகத்துத் தெய்விகனே!
ஸீதை கொழுநர்க்(கு) ஒரு தூதா!
தூய ராம பக்த்தனும் நீ!
சுந்த ரப்பேர் வாயுஸுதா!
ஆய க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (6)

*தேயம்–தேசம். தென்பால்... இருக்கும்–ப்ரதான அநுமன் தெற்குப் பார்த்திருக்கிறார். சேய–சிவந்த. சுந்தரப் பேர்–அநுமனுக்குச் சுந்தரன் என்றொரு பெயரும் உண்டென்பர்.*

முகாரி)

65. முக்த்தா! என்றே க்ஞாநியரும்
மோநி மாரும் மொழிவர்உனை
வித்தா ரத்தே ஸுந்தரமாய்
விளங்கும் காண்ட நாயகனே!
எத்தால் அன்றே இலங்கிணியை
இலங்கை நகரில் இறக்கவைத்த
அத்தா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (7)

*மோநி–மவுநி. வித்தாரம்–விரிவு. எத்தால்–புத்தி ஸாமர்த்தியத்தால். இலங்கிணி–இலங்கையைக் காக்கும் பெண் தெய்வம்.*

66. ஒருவ னாக இருக்கபிலத்(து)
உறையும் துரையே! ஆள்காட்டி
மருவ(வ்) விரலில் கணையாழி
வைத்த மஹிமை ராமபக்த்தா!
உருவம் ஆகி அஞ்சல்செய்கை
உயர்த்தும் அழகுப் பலபீமா!
அருவ! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (8)

*பிலம்–குஹை. ஆள் காட்டி... பக்தா–ராமர் தந்த (கணையாழி) மோதிரத்தைத் தன் வலது கை ஆள்காட்டி விரலில் அணிந்துள்ளதாக வயற்காட்டு அநுமன் திருவுருவம் அமைந்துள்ளது. அஞ்சல் செய் கை–அபய ஹஸ்தமாகக் கை உளது.*

சக்ரவாஹம்)

67. முப்பாழ் கடந்தாய்! மார்கழியில்
மூலத் துதித்தாய்! அமாவாஸை
தப்பா நாளில் தாரணிமேல்
தனிஅஞ் ஜனைமா ருதன்சுதனாய்
ஒப்பார் இல்லா உருத்திரனாய்
உகாந்தத் தாகும் பிரமன்எனும்
அப்பா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (9)

*முப்பாழ்–(ஜீவன், ஈச்வரன், ஜகத்) உயிர், இறைவன், உலகம் மூன்றும் ஆம். தாரணி–தரணி–உலகு, மாருதன்–வாயு பகவான். உக அந்தந்து ஆகும் பிரமன்–கலியுக முடிவில் வரும் பிரமன், பவிஷ்யச் சதுராநநாய நம: –ஆஞ்ஜநேய அஷ்டோத்தர சத நாமம்–31.*

**68.** **மிடியால் வாடும் வினையோரை**
**விதியை மாற்றி அளிக்கவல்ல**
**அடியாய்! பாரி ஜாததரு**
**அதன்கீழ்த் தவம்செய் அஞ்ஜனைசேய்!**
**கொடியாய் இருந்து பார்த்தனுக்குக்**
**கொடிய ஸமரில் உதவிசெய்தாய்!**
**அடியார் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய! அநுமானே!** **(10)**

*பாரிஜாத...அஞ்ஜனை சேய்–பாரி ஜாத த்ரும மூலஸ்தாய நம: ஆஞ்ஜ. அஷ்டோத்–20, கொடியாய்... உதவி செய்தாய்–அருச்சுநனின் தேரில் கொடியாய் இருந்தவன் அநுமன். பார்த்த த்வஜாக்ர ஸம்வாஸிநே நம: ஆ.அ.–103.*

கரஹரப்ரியா)

**69.** **பெண்மைக் கரசி ஜாநகியாம்**
**பிராட்டி தந்த சூடைமணி**
**உண்மைத் தெய்வம் ராகவன்பால்**
**உகந்து கொண்டு சேர்த்தருள்செய்**
**கண்மைச் சுரஸை களிப்படக்கும்**
**காலா! கடைய நல்லூருக்(கு)**
**அண்மைக் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய! அநுமானே!** **(11)**

*சுரஸை களிப்படக்கும் காலா: இலங்கையை நோக்கிச் சென்ற அநுமனைத் தடுத்து நிறுத்தி, உண்டு களிக்க நினைத்தவள் அரக்கி வேடம் கொண்ட சுரஸை. அநுமன் தன் உடலை முதலில் பெரிதாக்கிப் பின் சுருங்க வைத்து அவள் வாயில் நுழைந்து வெளியேறி விட்டான்.*

**70.** **பாடிப் பக்த்தர் குழுஎல்லாம்**
**பஜனை செய்துன் ஜயந்தியைக்கொண்**
**டாடி மகிழும் குளிர்பொழில்கள்**
**அளிகள் நன்செய் சூழ்கோயில்**
**தேடிக் கண்டு கொண்டுவந்தாய்!**
**தென்கா சிக்குற் றாலம் அரு(கு)**
**ஆடிக் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய! அநுமானே!** **(12)**

*அளி–வண்டு. நன்செய்–நெல்விளையும் நிலம்.*

வராளி)

71. அன்பார் மாதர் ஆடவர்கள்
அம்பார் விழியார் அரம்பையர்கள்
நின்பால் உள்ள நீர்நிலையில்
நியமத் துடனே நீராடித்
துன்பா னவையைத் தொடக்கொழிப்பார்
தொழுவார் அழுவார் எழுவர்பின்னே
அன்பார் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (13)

*தொடக்கு–தொடர்ச்சி. எழுவர்–எழுந்திருப்பார்.*

72. சரணா கதவத் ஸலன்நீயே!
சரணா கதரட் சகன்நீயே!
கருணா கரனாம் தாசரதி
காகுஸ்த் தன்மை திலிஇளையோன்
அருள்நா டியவண் ணம்பணிந்தே
அறைக்குள் வடக்கு நோக்கிஉளாய்!
அரணார் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (14)

*தாசரதி–தசரதன் மகன். இளையோன்–இலக்குமணன், தாசரதி...வடக்கு நோக்கி உளாய்: ஸீதா, ராம, லக்ஷ்மணர்களுடன், ஓர் அறைக்குள் அமர்ந்த நிலையில் வடக்கு நோக்கி உள்ளார் மற்றோர் அநுமன். அரண்–காவல்.*

ஸ்ரீராகம்)

73. இம்மா நிலத்தில் இறைஞ்சுநர்க்கே
எல்லாப் பேறு பதினாறும்
சும்மாத் தந்தே வரம்அருளும்
ஸுயம்பு வான மாருதியே!
கைம்மா முகனை முதல்வணங்கிக்
கடையில் உன்னை வணங்கு(ம்)மஹி;
அம்மா! க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (15)

*இறைஞ்சுநர்–வணங்கி வழிபடுவோர். கைம்மா–யானை. கைம்மா முகன்–கணபதி. கடை–முடிவு. மஹி–உலக மக்கள்.*

74. இருளார் வாழ்க்கை வாழ்வோரை
இஹத்தே பரத்தைப் பெறவைப்பாய்!
மருளார் மகனாம் அக்ஷனையே
மாள வைத்தாய்! கதைஉடையாய்!
தெருளார் பீம ஸோதரனே!
செய்யும் பொழிலும் தீர்த்தமுஞ்சூழ்
அருளார் க்ருஷ்ணா புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! அநுமானே! (16)

*இஹம்–பூலோக வாழ்க்கை. பரத்தை–முக்தி இன்பத்தை. மருள்–ஆணவ மயக்கம். அக்ஷன்–ராவணனின் மூத்த புதல்வன். அநுமனால் கொல்லப்பட்டவன். அக்ஷ ஹந்த்ரே நம: ஆ.அ.–56. செய்–வயல். பொழில்–சோலை.*

(வயற்காட்டு ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம்–1 முற்றும்)

# VIII-B. வயற்காட்டு ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம்–2

கல்யாணி) **கலி விருத்தம்** (ரூபகம்

**75.** திருவும்எழில் உருவும்உடை சிவனாகிய வடிவே!
அருவும்உரு அருவும்உரு ஆமாறுள அரசே!
கெருவம்துளி இல்லாஇறை! க்ருஷ்ணாபுரம் உறைவாய்!
பருவங்களில் விழவும்கொளும் பகவான்ஹநு மானே! (1)

*பருவம்–அமாவாஸை, மூல நட்சத்திர தினங்கள். விழவு–விழா, உத்ஸவம்.*

**76.** அற்றார்களுக் கற்றாய்! அடி உற்றார்களுக் குற்றாய்!
பெற்றார்களை மதிக்கும்படிப் பிறவாத்திறத் தடங்கி
உற்றாய்! பகை செற்றாய்! உயர் க்ருஷ்ணாபுரம் உறைவாய்!
மற்றார்உனக் கீடிவ்வுல கத்தே?ஹநு மானே! (2)

*அற்றார்கள்–கடவுள் பக்தி, நம்பிக்கை இல்லாதவர்கள். செற்றாய்–நீக்கினாய்.*

சுபபந்துவராளி) (ரூபகம்

**77.** பையார்முகம் உடையாய்! மழுப் படையாய்! எனை உடையாய்!
மையார்திரு மேனிப்பர மன்தூதென வந்தாய்!
செய்யார்பொழில் சூழும்பதி க்ருஷ்ணாபுரம் திகழ்வாய்!
ஐயா! உனை அடைந்தேன்அடைக் கலமாய்ஹநு மானே! (3)

*பையார் முகம்–பை போன்ற நீண்ட தாடை. மழுப்படையாய்–அநுமன், 'ருத்ர வீர்ய ஸமுத்பவன்' சிவன் ஆதலின் மழுப்படை என வந்துளது.*

**78.** பக்தப்பெரு மக்கட்கருள் பரமாம்ப்ரம்ம சாரீ!
சித்தத்தினில் ஸ்ரீராமனை ஜெபம்செய்திற லாளீ!
மத்தக்குழல் க்ருஷ்ணன்வளர் க்ருஷ்ணாபுரம் வளர்வாய்!
அத்தத்தினில் கணையாழிகொள் அண்ணா!ஹநு மானே! (4)

*மத்தக் குழல்–கேட்போரை மயக்கும் புல்லாங்குழல் இசை. அத்தத்தினில்–கையில்.*

ஆரபி) (ரூபகம்

**79.** கஞ்சக்கர விசுவேசரும் காண்அங்கயற் கண்ணி
அஞ்சக்கணி அகல்நீள்கணி அக்ராரமில் உறையத்
தஞ்சத்தருள் குலதைவமாய்க் க்ருஷ்ணாபுரம் தனிலே
நெஞ்சத்துறை தரல்போல்உளை! நீதான்ஹநு மானே! (5)

*கஞ்சக்கர–தாமரை போன்ற கையை உடைய–விசுவேசர். அகல் நீள்கண்ணி–(விசாலாக்ஷி) என்பன க்ருஷ்ணாபுரம் அக்ர ஹாரத்தில் உள்ள சிவன் கோயில் அரன், உமை திருநாமங்கள்.*

*அம்ஜம்–நீரில் மலரும் நீலோற்பலம். உமை–குவளைக்கண்ணி. அக்ராரம்–அக்ரஹாரம். உளை–உள்ளாய்.*

**80.** **உன்காலினில் வீழ்வார்உகந் தாழ்வார்உரை புகழ்வார்**
**பின்காமமும் கோபம்பயம் பிறிதேபல வெல்வார்**
**தென்காசியின் அருகாய்அமர் க்ருஷ்ணாபுரம் திகழ்வாய்!**
**நின்காலடி மறவேன்மந நிறைவால்ஹநு மானே! (6)**

*உகந்து–விரும்பி. ஆழ்வார்–பக்தியில் முழுகுவார், 12 ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்த உரைகளைப் புகழ்வர் எனினுமாம்.*

ரேவதி) (ரூபகம்

**81.** **குறுமாமலை போல்எய்திரு மேனிக்குணக் குன்றே!**
**பெறுமாதவர் பேணிப்பதம் பேசிப்புகழ் பெருமான்**
**குறுமாமுநி கும்பிட்டெடும் க்ருஷ்ணாபுரம் குறுகி**
**உறுமாமுநி! எந்தாய்! உனை உணர்ந்தேன்ஹநு மானே! (7)**

*குறு–சிறிய. குறுமாமுநி–அகத்தியர். உறு–உற்ற, அமைந்த.*

**82.** **தங்கச்சிலை போலும்எயில் தலைமேல்உடைச் சிகையாய்!**
**பிங்கக்கண னே!எம்மிறை!புச்சம்பெரி தானாய்!**
**வங்கக்கடல் கடந்தாய்! மறைக் க்ருஷ்ணாபுரம் வாழ்வாய்!**
**எங்கட்கருள் புரிவாய்! இறை குருவாய்ஹநு மானே! (8)**

*எயில்–மதில். பிங்க–(பிங்கல)–மஞ்சள் நிறமுள்ள. புச்சம்–வால். மறை–வேதம் ஒலிக்கும்.*

த்விஜாவந்தி) (ரூபகம்

**83.** **ஸ்ரீராகவ தூதா!சிவன் அயனாய்உருச் சேர்ந்தாய்!**
**பாராயண ஸ்ரீராம ஜயம்பன்னிடு வாயாய்!**
**நாராயணன் பரமன்மகிழ் க்ருஷ்ணாபுரம் நடுவே**
**சீராய்அமர்ந் துள்ளாய்! அருள் செய்வாய்!ஹநு மானே! (9)**

*அயன்–பிரமன். பன்னிடு–சொல்லப் பெறும்.*

**84.** **சநிஆதிய கோள்ஒன்பதும் நாளும்இறை தாஸன்**
**நினைநேர்படின் நடுங்கும்வினை ஒடுங்கும்இனி நேரா;**
**தனியேவந்து வயல்சூழ்தரக் க்ருஷ்ணாபுரம் தனிலே**
**இனிதாய்அமர் தருவாய்! எமை ஆள்வாய்!ஹநு மானே! (10)**

*கோள்–கிரகம். நேர்படின்–நேரே கண்டால்.*

பைரவி) (ரூபகம்

**85.** **கங்காநதி பாகீரதி மந்தாகிநி கழலை**
**அங்கார்வமொ டடியேம்தொழ அடிப்பாதல குஹையார்**
**இங்கார்வமொ டிருந்தாய்! எங்கள் க்ருஷ்ணாபுரத் திறையே!**
**மங்காஅருள் ஒளியேதர வருவாய்!ஹநு மானே! (11)**

*மந்தாகிநி–கங்கையின் ஒருபெயர். ஆர்–பொருந்திய, இங்கு– க்ருஷ்ணாபுரத்தில்.*

**86.** **வலமும்திரு மருவும்செயல் வலியும்தரு மகிழ்வால்**
**பலமிஞ்சிய பலவான்எனப் பாடும்உனைப் பாடேன்**
**இலமும்தொழ இருப்பாய்!, இவண் க்ருஷ்ணாபுரத் தீசா!**
**நலமும்தவ வலியும்தனி நல்காய்!ஹநு மானே! (12)**

*வலம்–உடல் வலிமை. செயல் வலி–செயல் வல்லமை.*

ஹமீர் கல்யாணி) (ரூபகம்

**87.** **தோள்மீதினில் அண்ணன்தொழும் இளவல்தமைத் தூக்கி**
**ஆள்வான்இலங் கையைப்போர்புரி அரக்கன்முனர்ப் பொருதாய்!**
**தாள்மீவிழு வார்கள்தொழும் க்ருஷ்ணாபுரம் தனிலே**
**ஆள்வாய்!அர சாகிக்குல தேவா! அநு மானே! (13)**

*அண்ணன்–ராமன். தொழும் இளவல்–லக்ஷ்மணன். பொருதாய்–சண்டையிட்டாய், மீ–மீது.*

**88.** **ஸஞ்ஜீவியைக் கொணர்ந்தாய்!ஜய வீரா!தகு தீரா!**
**எஞ்ஜீவரை ஏற்பாய்!இனி தாள்வாய்! இனி மேலும்**
**ஸஞ்ஜீவி!சி ரஞ்ஜீவி! தண் க்ருஷ்ணாபுரம் தனிலே**
**நஞ்ஜீவனுக் குயிராய்உறை நம்பா!ஹநு மானே!**

*ஜீவரை–வாழும் மக்களை. ஸம் ஜீவி–நன்கு (நல்லவனாய்) வாழ்பவன். சிரம் ஜீவி–நீண்டகாலம் வாழ்பவன். நம்பன்–தலைவன், கடவுள்.*

யமுநாகல்யாணி)

**89.** **பல்லூர்களும் பலகோயிலும் படைத்தாய்!உனக் குடைத்தாய்ச்**
**செல்லூர்தரும் ஆகண்டலன் சிறப்பாய்த்தொழும் கழலாய்!**
**வல்லூறுகள் இறைதேர்வயல் க்ருஷ்ணாபுரம் கடைய**
**நல்லூர்க்கரு குள்ளாய்!எங்கள் நாதா!ஹநு மானே! (15)**

*செல்–மேகம். ஆகண்டலன்–இந்திரன். வல்லூறு–ஒரு பறவை. பஞ்ச பட்சிகளுள் ஒன்று. இரை–உணவு.*

**90.** **அஞ்சற்கரம் காட்டிக்கொடு நின்றாய்!ஹநு மானே!**
**பஞ்சுக்கரம் பிஞ்சுக்கரம் பாலித்தருள் பரனே!**
**கஞ்சக்கயல் மீனார்வயல் க்ருஷ்ணாபுரம் காண்பாய்!**
**அஞ்சத்தகு மோ?என்றஞ்சல் அளிப்பாய்!ஹநு மானே! (16)**

*காட்டிக்கொடு–காட்டிக்கொண்டு. பஞ்சுக்கரம்–ம்ருதுவான கை. பிஞ்சுக்கரம்–குழந்தையினுடைய கை போன்றதான இளமைக் கை. கஞ்சக் கயல்–நீரில் தோன்றும் கயல் மீன். கம்–நீர்.*

(ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம்–2 முற்றும்)

(கடையநல்லூர்க் க்ருஷ்ணாபுரம் வயற்காட்டு ஆஞ்ஜநேயர் அருட்புகழ் இனிது நிறைவுறும்)

# IX. சென்னை–சைதாப்பேட்டை ஸ்ரீநகர் காலனி ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோயில் ஹநுமான் அருட்புகழ்

(10–8–1995)

**வெண்பா**

91. சென்னைநகர்ச் சைதையிற் சீநகர வாணனே!
அன்னைமஹா லக்ஷ்மி அவள்ஸீதை–தன்னை
மணந்தரா மன்தூத மாருதியே! தாஸன்
குணந்தனைக்கொள் கோ! ஏன்று கொள்.

*சீ நகர வாணன்–ஸ்ரீ நகர்க் குடியிருப்பில் வாழ்பவன். தாஸன் குணம்–தாஸத்வம். ஏன்றுகொள்–(என்னை) ஏற்றுக் கொள்.*

# X. சென்னை–119 சோழலிங்க நல்லூர் 'க்ளாஸிக் ஃபார்ம்' முருகன் கோயில் ஆஞ்ஜநேயர் அருட்புகழ்

(26–8–1999–இல் அருளியது)

**கொச்சகக் கலிப்பா**

92. அஞ்சலிக்கை அநுமானே! அலைச்சோழ லிங்கநல்லூர்
ஸஞ்ச்சரிக்கும் வாயுருத்ர தநுஜாஞ்ஜ நேய! மித்ரா!
அஞ்ஜனைக்குப் புத்திரனே! அணிமேற்கு நோக்கிநிற்பாய்!
பஞ்செனக்கை படைத்தவனே! பக்த்தன்எனைப் பராமரியே!

*அலை–அலைகளையுடைய கடலுக்கு அருகில் உள்ள. தநு–உடம்பிலிருந்து. ஜ–பிறந்த. மித்ரா–நண்பனே. பராமரி–காப்பாற்று.*

# XI. விற்குடி வீரட்டானத்தில் 1953–இல் அருளிய அநுமன் கீர்த்தனை

சிந்துபைரவி) பல்லவி (ஆதி

93. மாருதியே! பக்தி வாரிதியே!
வாயு ஸுதன் நீ கதியே (மாருதியே)

அநுபல்லவி

காருடல் ராகவன் கதைப்ரிய வீரா!
பேருர ராவணன் ஊர்எரித்த தீரா! (மாருதியே)

சரணம்

காருண்ய ஆஞ்ஜநேயா! சீருறும் ஹநுமானே!
பாருள பக்தர் பாடும் பரமனே! பலவானே!
ஏருடைய ஜாநகி இடர்தவிர்த்த தூதனே!
சேரவை ராமபதம் தேவனே! விற்குடிவாழ் (மாருதியே)

(ஆஞ்ஜநேயர் அருட்புகழ்ப் பாடல்கள் முற்றும்)

சுபம்

ஸ்ரீ ஆஞ்ஜநேய அஷ்டோத்தர சத நாமாவளி

## ஸ்ரீ ஆஞ்ஜநேய அஷ்டோத்தர ஶத நாமாவளி:

த்யாநம்

மநோஜவம் மாருத-துல்ய-வேகம் ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் ।
வாதாத்மஜம் வாநர-யூதமுக்யம் ஸ்ரீராமதூதம் ஶிரஸா நமாமி ॥

நாமாவளி

1. ஓம் ஆஞ்ஜநேயாய நம:
2. ஓம் மஹாவீராய நம:
3. ஓம் ஹநூமதே நம:
4. ஓம் மாருதாத்மஜாய நம:
5. ஓம் தத்வஜ்ஞாநப்ரதாய நம:
6. ஓம் ஸீதாதேவீ முத்ரா ப்ரதாயகாய நம:
7. ஓம் அஶோகவநிகா சேத்ரே நம:
8. ஓம் ஸர்வ மாயா விபஞ்ஜநாய நம:
9. ஓம் ஸர்வ பந்த விமோக்த்ரே நம:
10. ஓம் ரக்ஷோ விध்வம்ஸ காரகாய நம:
11. ஓம் பரவித்யாபரீஹாராய நம:
12. ஓம் பரஶௌர்ய விநாஶநாய நம:
13. ஓம் பரமந்த்ரநிராகர்த்ரே நம:
14. ஓம் பரயந்த்ர ப்ரபேதகாய நம:
15. ஓம் ஸர்வக்ரஹவிநாஶிநே நம:
16. ஓம் பீமஸேந ஸஹாயக்ருதே நம:
17. ஓம் ஸர்வது:க ஹராய நம:
18. ஓம் ஸர்வலோகசாரிணே நம:
19. ஓம் மநோஜவாய நம:
20. ஓம் பாரிஜாத த்ரும மூலஸ்தாய நம:
21. ஓம் ஸர்வமந்த்ர ஸ்வரூபவதே நம:
22. ஓம் ஸர்வ தந்த்ர ஸ்வரூபிணே நம:
23. ஓம் ஸர்வயந்த்ராத்மகாய நம:
24. ஓம் கபீஶ்வராய நம:
25. ஓம் மஹாகாயாய நம:
26. ஓம் ஸர்வரோக ஹராய நம:
27. ஓம் ப்ரபவே நம:
28. ஓம் பலஸித்திகராய நம:
29. ஓம் ஸர்வவித்யா ஸம்பத் ப்ரதாயகாய நம:
30. ஓம் கபிஸேநாநாயகாய நம:
31. ஓம் பவிஷ்யச் சதுராநநாய நம:
32. ஓம் குமார ப்ரஹ்மசாரிணே நம:
33. ஓம் ரத்ந குண்டல தீப்திமதே நம:
34. ஓம் சஞ்சலத்வால ஸந்நத்த லம்பமாந ஶிகோஜ்வலாய நம:
35. ஓம் கந்தர்வ வித்யா தத்வஜ்ஞாய நம:
36. ஓம் மஹாபலபராக்ரமாய நம:
37. ஓம் காராக்ருஹ விமோக்த்ரே நம:
38. ஓம் ஶ்ருங்கலாபந்தமோசகாய நம:
39. ஓம் ஸாகரோத்தாரகாய நம:
40. ஓம் ப்ராஜ்ஞாய நம:
41. ஓம் ராம தூதாய நம:
42. ஓம் ப்ரதாபவதே நம:
43. ஓம் வாநராய நம:
44. ஓம் கேஸரீ ஸுதாய நம:
45. ஓம் ஸீதா ஶோக நிவாரணாய நம:
46. ஓம் அஞ்ஜநா கர்ப ஸம்பூதாய நம:
47. ஓம் பாலார்க ஸத்ருஶாநநாய நம:
48. ஓம் விபீஷணப்ரியகராய நம:
49. ஓம் தஶக்ரீவகுலாந்தகாய நம:
50. ஓம் லக்ஷ்மண ப்ராணதாத்ரே நம:
51. ஓம் வஜ்ரகாயாய நம:

**ஸ்ரீ ஆஞ்ஜநேய அஷ்டோத்தர சத நாமாவளி**

52. ஓம் மஹாத்யுதயே நம:
53. ஓம் சிரஞ்ஜீவிநே நம:
54. ஓம் ராமபக்தாய நம:
55. ஓம் தைத்ய கார்ய விகாதகாய நம:
56. ஓம் அக்ஷஹந்த்ரே நம:
57. ஓம் காஞ்சநாபாய நம:
58. ஓம் பஞ்சவக்த்ராய நம:
59. ஓம் மஹாதபஸே நம:
60. ஓம் லங்கிணீபஞ்ஜநாயநம:
61. ஓம் ஸ்ரீமதே நம:
62. ஓம் ஸிம்ஹிகா ப்ராண பஞ்ஜநாய நம:
63. ஓம் கந்தமாதந சைலஸ்தாய நம:
64. ஓம் லங்காபுரவிதாஹகாயநம:
65. ஓம் ஸுக்ரீவ ஸசிவாய நம:
66. ஓம் தீராய நம:
67. ஓம் சூராய நம:
68. ஓம் தைத்யகுலாந்தகாயநம:
69. ஓம் ஸுரார்சிதாய நம:
70. ஓம் மஹாதேஜஸே நம:
71. ஓம் ராமசூடாமணிப்ரதாயநம:
72. ஓம் காமரூபிணே நம:
73. ஓம் பிங்கலாக்ஷாய நம:
74. ஓம் வார்தி மைநாக பூஜிதாய நம:
75. ஓம் கபலீக்ருதமார்தாண்ட மண்டலாய நம:
76. ஓம் விஜிதேந்த்ரியாய நம:
77. ஓம் ராம ஸுக்ரீவ ஸந்தாத்ரே நம:
78. ஓம் மஹா ராவண மர்த்தநாய நம:
79. ஓம் ஸ்படிகாபாய நம:
80. ஓம் வாகதீசாய நம:
81. ஓம் நவ வ்யாக்ருதி பண்டிதாய நம:
82. ஓம் சதுர்பாஹவே நம:
83. ஓம் தீநபந்தவே நம:
84. ஓம் மஹாத்மநே நம:
85. ஓம் பக்தவத்ஸலாய நம:
86. ஓம் ஸஞ்ஜீவநநகாஹர்த்ரேநம:
87. ஓம் சுசயே நம:
88. ஓம் வாக்மிநே நம:
89. ஓம் த்ருடவ்ரதாய நம:
90. ஓம் காலநேமிப்ரமதநாயநம:
91. ஓம் ஹரிமர்கடமர்கடாயநம:
92. ஓம் தாந்தாய நம:
93. ஓம் சாந்தாய நம:
94. ஓம் ப்ரஸந்நாத்மநே நம:
95. ஓம் சதகண்டமதாப ஹ்ருதே நம:
96. ஓம் யோகிநே நம:
97. ஓம் ராமகதாலோலாயநம:
98. ஓம் ஸீதாந்வேஷண பண்டிதாய நம:
99. ஓம் வஜ்ர தம்ஷ்ட்ராய நம:
100. ஓம் வஜ்ர நகாய நம:
101. ஓம் ருத்ர வீர்ய ஸமுத்பவாய நம:
102. ஓம் இந்த்ரஜித் ப்ரஹிதாமோக- ப்ரஹ்மாஸ்த்ர விநிவாரகாய நம:
103. ஓம் பார்த த்வஜாக்ர ஸம்வாஸிநே நம:
104. ஓம் சரபஞ்ஜரபேதகாயநம:
105. ஓம் தச பாஹவே நம:
106. ஓம் லோக பூஜ்யாய நம:
107. ஓம் ஜாம்பவத் ப்ரீதி வர்த்தநாய நம:
108. ஓம் ஸீதா ஸமேத ஸ்ரீராமபத்ர ஸேவா துரந்தராய நம:

***ஸ்ரீ ஆஞ்ஜநேய அஷ்டோத்தர சத நாமாவளி ஸம்பூர்ணம்***

